கூச்சறாயிலிசெய்பிற் குலவியவைசம்புகூட்டத்
தேய்ச்சுமேலுள்ளுங்கொள்ள தோஷமுஞ்சிதைந்துபோமே ௰௫

வாதமெலிவுதோஷம்

வாதமேமெலிந்துவிம்மி வரண்டதுபுறண்டுகத்தி
சேகமாபரணைவால்போய் சிக்கியேதுடித்துநிற்கில
வாதையேபொருகிமேலில் வந்திடுந்தோஷந்தானென்
ருேதினோர்முன்னோரிந்த தகமையைக்கண்டுசொல்லே ௰௬

சர்வாங்கவாதசன்னிக்குணம்.

கூறிட்டவாதநாடி கோழிபோற்கிண்டிநின்றால்
வாரிட்டமுலைநல்லாளே வாதமாஞ்சன்னியாகும்
பரிட்டெடுத்தெடுத்துப் பிரப்படத்திபங்குமாகில்
ஆரிட்டதேகந்துண்டாம் அதுசருவாங்கமாமே ௱௭

மேற்படிநோய்தீரமருந்து

பதரியாவாதநாடி பாய்பரிபோலவோடிற்
சிதறியமூன்றாம்நாளிற் சேர்ந்திடுந் திரைவாலி
மதறியாய்ச்சொண்ணூற்ஞ்ஞூறு நாழியில்மரிக்காவிட்டால்
விதறியாய்வேம்பினெண்ணெய் விஷமுஷ்டிதைலங்கூட்டே ௰௮

வாதக்கதியால்வருநோய்கள்,

வாதமேகதித்தபோது வாயுவும்எழும்பங்கண்டீர்
வாதமேகதித்தபோது வந்திடுஞ்சன்னிதோஷம்
வாதமேகதித்தபோது வந்திடும்வியாதிமேலும்
வாதமேகதித்போது வல்லுடல்மெலிந்துக்கொல்லும் ௰௯

இருநாழிகையிலும்ஒருநாழிகையிலும்சாகுங்குறி

மந்தமாய்வாதநாடி மயிருரும்பேன்போலோடில்
இந்தமாணிடர்க்கிரண்டு நாழிகையிருப்புமில்லை
வந்தவன்முகமும்வேர்த்து மஞ்சளிநிறமெய்யாகில்
முந்தவோர்நாழிகைக்குள் முடிவதுதிண்ணந்தானே ௨௰

தனிவாயும்-நோயும்-வலிகுன்மமும்-மாணமும்வருங்குறி

வாதந்தான்தனித்துநிற்கில் வாயுவுந்தனித்துநிற்கும்
வாதந்தானுதறிநிற்கில் வலிகுன்மம்வந்துசேரும்
வாதத்தின்திரட்டதெல்வாம் இவ்வுகைவடிவுதானே ௨௧

கர்ப்பந்திரித்தநாடிக்குணம்

காரிகைதமக்குபிள்ளை கருப்பையைப்பற்றிநின்றூர்
கூரியவாதநாடி குண்டலப்புழுப்போலூரும்
வீரியமூன்றுந்திங்கள் விட்டில்போற்பதைத்துநிற்கும்
பாரியவெட்டாந்திங்கள் பையவேபுழுப்போலூரும் ௨௨

மாதர்கைப்பிடித்தபோது வந்திடும்வாதநாடி
தீதுறவெடித்துப்பாய்ந்து சிதறியேசிலம்பின்றோர்
பேதைதன்வயிற்றலுள்ளே பெருகுசுரோணிதமேதங்கி
வாதைகள்பண்ணமாதவிடைகாலம்வருத்தஞ்செய்யும் ௨௩

கர்ப்பந்தரிக்கக்குழம்பு

இடுப்பொடுகடுக்குநொந்துஇடைவிடாக்குத்தலுண்டாய்
தடுத்திடாகாப்பந்தன்னைத்தங்கிடாவண்ணஞ்செய்யும்
அடுத்தமீதாராவின்னெய்பி லானதோர்திருகுகள்ளி
கொடுத்திடாத்தும்மட்டின்காயின் குழம்பதுகொடுக்கத்தங்கும் ௨௪

சூதகத்தில்வாயுதங்கியகுணம்

மாதர்கைப்பிடித்தபோது வந்திடும்நாடிமூன்றும்
சேதமாயிற்றுநின்ற சேரவேபதிந்துநிற்கில்
ஓதுமேசூதகத்தி லோங்கியவாய்வேநின்று
பேதையாய்வாதைபண்ணி பிணிகளைவிளைக்குந்தானே ௨௫

எரிகுன்மவாலாறு தீருமருந்து

வாதமும்பித்தங்கூடிவன்பெலத்துடனேயோடிற்
தீதரும்வயிற்றினுள்ளே திரண்டதோர்மந்தம்பற்றி
வேதனைஎரிப்பங்கூடி விரண்டிடும்எரிந்தகுன்மம்
ஆதிசேர்சீனிகூட்டி அஷ்டசூரணந்தான்கொள்ளே ௨௬

சூலநோய்வரலாறு

திருத்தமாய்வாதத்தோடே தீங்கொடுபித்தஞ்சேறிற்
பொறுப்புகள்தோறும்நொந்து போதவேபிடிக்குஞ்சூலை
பெருத்திடாவாயுகொள்ளும் பேசியவயிறேபோகும்
கருத்தினுறைநிற்குநன்றாய் கண்டிடாய்மனிதர்கெல்லாம் ௨௭

காலன்பிடிக்கும்நாடி

அறவின்றன்நாவைப்போல அடிக்கடியுதறிவாதம்
உறம்பெறநின்றுபித்தம் ஓடியேயொளிக்குமாகில்
திரும்பிடாக்காலனேனே தீங்குடன்பிடித்தானென்று
வரம்பெறுமுனிவர்தாணும் வாகொடுசொன்னார்தேர்ந்தே ௨௮

மூலாதாரவாதையாற்சாதலும் பைத்தியம்பிடித்தலுமறிக

பிறந்திடும்பித்தநாடி பிரண்டுமேநிற்குமாகில்
வறணடிடுமூலாதாரம் வாதையால்மடிவுசெய்யும்
சுறண்டத்துபித்தநாடி கதிப்பொடுதுடித்துநின்றால்
அரணடிடும்பைத்தியந்தான் அடைவொடுவந்துகூடும் ௨௯

பேச்செழும்பதலும்-அடங்கலும்-குளறலும்வருகை

உற்றிடும்பித்தநாடியொழுங்கொடுஎழும்பிநின்றால்
வற்றிடாப்பேசுகின்றவசனமுமெழும்பிநிற்கும்

மத்திமப்பித்தநாடியடங்கியே துடித்துநின்றால
உத்தமம்பேச்சிதானுமலுடி கிவாய்குளறிப்போகும்

பைத்தியநோய்-வரலாறும்-தீரும்மருந்து

பித்தமாம்நாடி தானேபெலத்தோடுதனித்துநிற்கில்
மத்திமப்பைத்தியத்தைவளர்த்திடும்வாகநீசேரும்
உத்தமூளிதன்னில்உருகியேகுறைந்துநிற்கும்
சித்ததாமுத்தாடும்எண்ணெய்சிறசிற்றேயத்தாறப்போமே ௩௪

கிறுகிறுப்புத்தீரக்கஷாயம்

உதறியேபித்தநாடிஉழுவைப்போற்றுடித்துநிற்கிற்
பதறியேயுடம்பழுத்தும் பாய்ந்திடுஞ்சிறுநீர்வற்றும்
முதலியபுத்திமாறிகிறுகிறுத்தழலையுண்டாம்
விதலியபயறும்பச்சைநெல்லிக்காய்கஷாயங்கூட்டே ௩௫

சுரத்தொடுகபாலக்குத்துவரலாறுந்தீரும்புகையும்.

கடுவிரற்பித்தமற்றுமங்கமாய்நடக்குமாகில்
வடிவுளவுடம்பழுத்திமந்தித்தச்சுரமுந்தோன்றி
யிடியிடித்ததுபோலோடிச்சிரசினிலிடித்துக்குத்தும்
படியவேசாதிலிங்கப்புகைபுண்ணைப்மறந்துபோமோ ௩௬

வறக்ஷிசுரம்பிரமேகம்வரலாறு,

வளர்ந்திடும்பித்தநாடி வலமிடம்பிசகார்வணணம்
பிளந்ததுதனித்துப்பச்சைப்புழுவுடங்கதுபோலோடில்
உளந்தனில்வறக்ஷிதங்கியுடம்புலர்நதஸ்திதன்னில்
வளந்திடுஞ்சுரங்கள்வந்துவளர்பிரமேகமாமே ௩௭

மஞ்சள்நிறநீர்க்கடுப்பு உடல்தளர்ச்சிதீரவங்கபற்பம்

சலநிறமஞ்சள்போலால்கடுத்திடுந்தளர்ச்சிசெய்யும்
உலவியமூன்றுமாதம்பழகிச்பின்னுடம்பதன்னிற்
குலவியவங்கபற்பம்கொடுக்காமலூறுமாகில்
விலகிடாச்சூலைவந்துவெடித்துப்புண்ணாகுமென்னே ௩௮

பித்ததாலுண்டாகுநோய்கள்வருதலறிக

பித்தமேதனித்தாற்சூடு பெலத்துடலுலரச்செய்யும்
பித்தமேமிகுந்தாலீளைபெருமலும்பெலத்துநிற்கும்
பித்தமேமிகுந்துதானுற்பெலன்குறைந்துடம்பழுத்தும்
பித்தமேதிரட்டிநூலிற்பேசினார்பெரியோர்தாமே ௩௯

பெருவாதம்-உதரவாயு-பைத்தியமுதலானபிணிகளுண்பவித்தல்,

பித்தமேகதித்தபோதுபெருத்திடும்வாகமுண்டாம்
பித்தமேகதித்தபோதுபெருத்திடும்வயிற்றில்வாயு
பித்தமேகதித்தபோதுபிதற்றிடும்பித்தேகேளு
பித்தமேகதித்தபோது பிறந்திடும்பிணியனேகம் ௪௦

சன்னிவாதம்பினற்றல்பிதற்றல்நினைவிழுப்புவருகை

பித்தந்தான்வாதத்தோடுபிணங்குநேர்தோன்றுமாகில்
மத்திடசன்னிவாதம்வந்திடும்பினற்றலுண்டாம்
உற்றிடும்வாதத்தோடுவுறவதாய்ப்பித்தமீறில்
நித்தமும்பிதற்றிப்பேசிநினைவிழுந்திருப்பாரென்னே ௩௮

மேற்படி நோய்கள்தீரமருந்தும்க்ஷயரோகமும்வரலாறும்

முற்றுமிகச்சுணங்கள்கண்டால் முயிறதன்முட்டைதன்னை
சுத்தப்பாலினோடுங்கலந்தருந்திதமாய்பின்பு
பித்தந்தானையத்தோடுபெருமுகக்திரும்பிகிற்கில்
மத்தியக்ஷயரோகத்தைவருகவென்றழைக்குந்தானே ௩௯

சீழும்-விடாதசுரமுங்காணும்-க்ஷயரோகந்தீர

குக்கிலாதி நெய்யுஞ்சாறும்

இருமியேசீழும்விழுந்துஇடைவிடாசுரமுங்காயும்
பருவமாய்நெஞ்சில்பற்றிபதறியேபிறத்தம்வீழும்
குருநிலைக்குக்கிலாதிகிருகத்தாற்குடிபோம்பின்பு
எருநெரிகண்டங்தோடைவளையதனீரைக்கொள்ளே ௪௰

அசாத்தியசுரநாடிக்குக்குறியறிதல்

அய்யமாம்நாடிதானேயரணைவாலாற்றுநேர்ந்து
பய்யவேமந்தஞ்சானும்பற்றிடாதிருக்குமாகிற்
செய்வதொன்றில்லாக்காலன்தேடுவதுண்மையென்று
கையினைப்பிடிக்கவேண்டாங்கழற்றிக்கொண்டப்பாற்செல்லே ௪௧

இருமலீளை யிளைப்புகோழைதீர,

உற்றிடும்ஐயநாடியோங்கியேதுடித்துநின்றார்
பற்றிடும்இருமலீளைபதறியேஇளைப்புண்டாகி
மெத்தவேகோழைவாயுமிகுத்திடிற்கற்கத்தோடு
சுத்தமாய்தூதுவேளைதோடைகைகண்டங்கூட்டே ௪௨

தொண்டையும்-நெஞ்சுகட்டி-மழைக்காலுபாதித்தல்

தீரக் குக்கிலாதிநெய்,

இகமொடுஇறுநாடிஇளகிடாதிறுகிநின்றாற்
பதமொடுதொண்டைகட்டும்பழுத்துநெஞ்சதனிற்கட்டும்
விதமொடுமழைநேரத்திலமிகுதியாய்வாதைபண்ணும்
நிதியெனகுக்கிலாதிநெய்பினுல்மாறுந்தானே ௪௩

பீனசுமூக்கு-நீர்ப்பாய்ச்சல்மண்டைச்சீலை

தலைகணப்புததிரநண்டுநெய்

ஒடுக்கமாஞ்சிலேட்டுமநாடியொழுங்கொடுபதறிநின்றால்
நடுக்கமாய்ப்பீனசங்கள்நாசிநீர்ப்பாய்ச்சலாடும்
விடுதிடும்மண்டைச்சூலைபொருத்திடுந்தலைகணப்பு
தடுத்திடும்நண்டுநெய்யைததலையினித்தப்பதீரும் ௪௪

ஓர்பகலுக்குள்ளிறக்குநாடிக்குறி

மத்தியஐயநாடி மந்தித்துவுழன்றுநின்று
முத்தியாசல்போல முடிகியேபதறுமாகில்
நித்தமோர்பகலுக்குள்ளே நில்லாதுமரணம்வந்து
சுத்தியேமரிப்பாரென்னச் சொல்லுவார்நல்லோர்தானே சரு

குத்தங்கோழைவாயுமரணநிச்சயக்குறி

சிலேட்டுமநாடிதானே தெளிவொடுநிற்கிற்றீதாம்
சிலேட்டுமமந்தம்பத்தில் சேர்ந்திடும்கோழைவாயு
சிலேட்டுமமிருந்துநின்றால் செப்பிடும்மரணந்திண்ணம்
சிலேட்டுமத்திரட்டதெல்லாந் தெளிவொடுகண்டுகொள்ளே சசு

சாகக்குறியறிதல்

ஐயந்தான்பித்தந்தன்னை யணைத்தெதுத்தேறுமாகில்
தையவோர்நாளிற்காலன் நாடியேவருவதுண்மை
பையவேஐயம்பாய்ந்து வாதத்தைப்பறறிநின்றால்
செய்யும்வாரென்னசாவோர் நாழிகைதிண்ணந்தானே சஎ

வியாதிதோஷம்-ஐயசன்னிமரணங்கள்வருகை.

ஐயமேகதித்தபோது அணுகியேவியாதியுண்டாம்
ஐயமேகதித்தபோது யறிந்திடும்தோஷமாகும்
ஐயமேகதித்தபோது வையமாஞ்சன்னியாகும்
ஐயமேகதித்தபோது அவ்வையமேமெலிந்துக்கொல்லும் சஅ

(சரீரக்குத்தலும்-நெஞ்சுநோக்காடுமாய்க்காணும்-மேகமறிக)

பார்த்திடும்நாடிமூன்றும் பதிந்ததுமெலிந்துநிற்கில்
தோர்ந்திடும்மேகம்உள்ளே தோன்றியேபொருந்திமெய்யில்
ஆர்த்திடாக்குத்தலுண்டா மதனொடுநெஞ்சும்நோகும்
தோத்தமாயிக்குணங்கள் தெளியவேயறிந்திடாயே சகூ

பிணிவாராமையும்-வருகையுமறிக.

வாதபித்தையமூன்றும் வண்பலத்துடனேதத்தம்
பேதமென்றில்லவண்ணம் பேசியதானந்தன்னில்
நீதியாய்நிலைத்துநின்றால் நெடும்பிணிசிக்கலில்லை
தானுவுமொன்றேடொன்று தாவிடிற்பிணிகள்தானே ருய

(சுழல்-வாதம்-மூலம்-சாவு-வாழ்வுவருகை)

மூவருமுரத்துநின்றால் முதிர்ந்திடுங்கழல்வாதங்கள்
மூவருமந்தமானால் மூளைத்திடும்மூலமெல்லாம்
மூவரும்பதுங்கிநின்றால் முடிவதுதிண்ணங்கண்டாய்
மூவருந்தன்தன்காலத் துடித்திடில்வாழலாமே ருக

ஆறுமாதத்திற் சாகுங்குறியறிதல்.

காலையில்மூன்றுநாடி கதிப்பொடுபுக்குமாகில்
வாலையாமூச்சிகாலம் வன்பித்தமடூர்துமாகில்

மாலையில்வா தந்தானுமையத்திலுறையுமாகில்
நீலகண்டத்தாராணைநிலைச்சாவுமாதமாறே ௫௨

மலசலஅடைப்பும்விடுப்பும்வருதலறிக

பெருவிரலிரண்டுபக்கம் நாடிதான்பிசகியோடில்
மருவியமலசலங்கள் மந்தித்தேயடைத்துக்கொள்ளும்
பெருகலையடிவயிற்றில் பிடித்துமேலெழும்புமாகில்
தடையில்லைமலசலங்கள் தானதுகழன்றுபோமே ௫௩

தொப்புளில் - மலசலம்-வாயு-இடதுசந்து - இடதுமுதுகு.

நடுவிரல்வலதுபக்கம் நாடிதானடக்கும்போது
மடையதாமுந்திதன்னில் மலஞ்சலம்வாயுசேரும்
வடநிலைமூலையின்மாதே வலதொடுயிடதுசந்து
இடமுதுகழுத்தில்நிற்ப தென்பதுமுன்சொன்னேமே ௫௪

தொப்புளின்கீழே-ஐயமும்-பித்தமும்-சேருங்குணமறிக.

நடுவிரலிடதுபக்கம்நாடிதான் நடக்கும்போது
அடைவொடுவுந்தியின்கீ யையொடுபித்தஞ்சேரும்
கடகரியுரித்தோன்றன்னைக் கருத்தினிலிருத்திக்கொண்டு
வடுவறநாடிபார்த்து வந்தநோயறிந்துசொல்லே ௫௫

(கால்கைவலிப்பும்-உடல்நோக்காடுமாய்வருஞ்-சூலைநோய்க்குறி)

சிறுவிரலிரண்டுபக்கம் நாடிதான்சிதறியோடில்
மருவியகாலுங்கையும் வலித்துடல்மிகவேநோகும்
ஒருபொருளாகிநின்ற வுமையொருபாகம்வைத்த
திருசடைச்சிவனைநோக்கி செப்பினேன்சூலையாமே ௫௬

சூலைநோய்-சகத்தவாய்-நீர்மயக்கம்வாந்தி..

அடிவயிற்றுச்சூலைவருகை.

மோதிரவிரலிடத்தே முடுகியேநாடியோடில்
காதியுங்குலைநோயுண்டாம் கைத்திடுப்வாய்நீரூறும்
வாதியானருளினாலே மயக்கமும்வாந்தியுண்டாம்
ஆதியேயடிவயிற்றிற் சூலையுமமர்ந்துநிற்கும் ௫௭

கால்கைகடுப்பு-சோபம்-உந்திநோய்-தலைவலிவருகையும்.

சிகச்சையுமறிதல்.

மோதிரவிரலிடத்தே முடுகியேநாடியோடில்
கால்களுங்கைகளுந்தான் கடுத்துபின்சோபமாகி
ஓதியேயுந்திநொந்து வுறுதியாய்த்தலைவலித்தில்
ஆதியானருளினாலே யவர்கட்குநசியம்பண்ணே ௫௮

இரண்டாம்நாளிலும்-எட்டாம்நாளிலும்-சாகுங்குறி.

வெள்ளநீரோடும்போல சிலேட்டுமம்மீறியோடில்
வள்ளல்தானறியச்சொன்னே மறிப்பதுமற்றுநாளில்

தெள்ளியவாதந்தானுஞ் சிதறியேயோடுமாகில்
உள்ளியநாளோரெட்டி லுறுதியாய்ச்சாவரென்னே ௫௯

௩-நாள்-௰௫-நாள்-௪௰-நாளிற் சாகுங்குறி

பித்தமிப்படியேயோடிற் பிதற்றிநாள்மூன்றிற்கொல்லும்
மூத்தியவாதபித்தம் மூயங்கியப்படியேயோடில்
பற்றச்சொன்னேங்கண்டீர்பதினைந்துநாளிற்கொல்லும்
நற்றியஐயங்கூடில்நாற்பதுநாளிற்கொல்லும் ௬௰

உடனேயும்-௩-மாதத்திலுஞ்சாகும்-நாடிக்குறி

அரணைவாற்றுடிபோலாடி லாங்கவன்பிழைப்பதில்லை
பரவுதேட்கொடுக்குப்போலும் பாதத்திடிற்சாவுதிண்ணம்
கரையெறும்பதுபோலோடிற் கண்டிடாய்த்திங்கள்மூன்றில்
வரையணிமுலைநல்மாதேமரணமென்றறிந்துகொள்ளே ௬௧

மரணநாடிக்குறியறிதல்

ஐயமாஞ்சிலேட்டுமத்திலாகியநாடிதானுந்
தொய்யவேதவளைபோலத்தொக்கியேகுதித்திட்டாலும்
பையவேபுரண்டுபுத்துப் பாம்பெனநடைகண்டாலும்
மைசெறிகுழலினாளே மரணமென்றறிந்துகொள்ளே ௬௨
கண்டவிற்றிடிப்புமூண்டு கடியமூவிரலைமூன்றில்
விண்டையம்வாதபித்தம் மேவியநாடிமூன்றும்
ஒண்டொடிமாதேகேளா யுயர்ந்ததோர்தோற்றமாகி
மண்டியேயெழுந்துபாயில் மரணமென்றறிந்துகொள்ளே ௬௩

ஒருமாதத்திற்சாகும்நாடிக்குறி

தேளெனத்தெரிந்துசற்றேதிரிநாடிசெய்யுமாகில்
மாளவேமரணவாதை வந்திடிற்சன்னியுண்டாம்
மீளுவதில்லைமுன்னாள் விதிப்படிவந்ததீது
நாளறிதிங்கட்குள்ளே நாசமாய்க்கொல்லுந்தானே ௬௪
ஏற்றியதீபந்தன்னி லெரிசுடர்த்தீயைப்போலே
போற்றியநாடிதானும் பொலிவுறத்தோன்றுமாகில்
மாற்றரும்வாழ்வுநாளுமாளுமோர்மாதமென்று
நாற்றிசையுள்ளோர்க்கெல்லாம் நாடிநேயந்துசொல்லே ௬௫

(இரண்டரைநாளிலும்-எட்டுநாளிலுஞ்சாகும் ஐயநாடிக்குறி)

புரண்டதுவுருண்டுமேலேபொருந்துநீர்நடக்குமாகில்
இரண்டரைநாளினிற்றுடிடல்பதாமரணமென்க
சுருண்டமென்குழலினாளே சொல்லுநாளெட்டினிற்றுன்
மரணமேவருகுமென்று வாகொடுவழங்குவாயே ௬௬

பிராணன்விடுநாடிக்குறியறிதல்

நிரைபுரவட்டம்பூண்டு நின்றிடுமரணைவால்போற்
குரைபடாப்பித்தமொன் றுங்குறைந்துமேலிற்குமாகில்
உறைவிடும்பிராணனென்று உண்மைசொல்வாகடத்திற்
பறையதுகட்டிச்சாற்றும் பண்டிதர்க்கெல்லாம்பாரே ௬௭

குணவாகடத்தின்நோயின்சாரம்-முற்றிற்று-ஆகசெய்யுள்-௨௬௮

காவியத்தின்நாடி.

—:०:—

காப்பு.

பாருடன்கணேசன்பாதம் பணிந்துமுக் குணங்களாய்ந்து
வாசடத்தொகுதியல்லாம் வகுத்தசூத்திரமதாக்கி
யாகமவிதியின்ஞாலத் தடர்ந்திடும்நோய்களெல்லாம்
போகநல்மருந்துசொல்வோம்புலத்தியாபொருந்திக்கேளே.

நூல்-நாடிவகை.

பொருந்திக்கேள்பொருந்திக்கீழே புகன்றேறுஞ்சுழியைப்பற்றி
யெழுந்ததோர்நாடிதானு மெழுபத்திராயிரந்தான்
தெரிந்ததோரிவற்றில்பத்துத் தெசநாடியிவற்றில்மூன்றும்
பரிந்ததோர்வாதபித்தம் படரையுமறிந்துபாரே ௨

அறிந்துதானிதற்குநாம் மறைந்தனரறிவுள்ளோர்கள்
தெரிந்ததோரிடைதான்வாத மியன்றபின்கலைதான்பித்தஞ்
செறிந்துகொள்சுழிதானையஞ் சேர்விடமெங்கேயென்னில்
பிறிந்துகொள்மலமாம்வாதம் பேர்பெறுநீராம்பித்தம் ௩

பித்தத்தின்கீழேஅய்யம் பெரியதோர்விந்திற்சேரும்
குத்தமேசேருமையுங் குறிதனைக்குறித்துக்காணும்
பித்தத்தைப்பிரித்துநன்றாய் பேசுவோம்பேதம்போக்கி
பத்தத்தைக்குறியாயெண்ணிப் பரிவுடனறிந்துபாரே ௪

பாரப்பாஇடைஇடைக்கால் மாறியேகபாலஞ்சாடி
சாரப்பாவலக்கரத்திற் சார்ந்திடும்பின்கலைத்தான்
சேரப்பாஇடதுகாலிற் சென்றுதான்கபாலததேறிப்
பேரப்பாவிடக்கரத்திற் பொருந்திப்போஞ்சுழினைகேளே ௫

கேளப்பாபுருவமத்திச் சுழினையாமிடைபின்மூன்றில்
நாளப்பாநவதாதாக நடந்திடுநாடிபாரு
தேளப்பாநாடிபத்துந் தசவாயுவுடனேசேரும்
சூளப்பாதசதானங்கள் சொல்லுவேன்சொல்லுவேனே ௬

வேறு-நாடிஸ்தானம்.

சொல்லுகிறேன்காமியந்தான்குதிகால்வந்து சொற்பெரிய வுந்திகரமார்புகண்டஞ்-சொல்லுகிறேன் புருவமத்திகாதுமூக்கு தொகைபத்தில்வாழ்ந்திருக்குந்தாதுமூன்றுஞ்-சொல்லுகிறேன் கரத்தெழுந்த நாடிமாறில்சோதிக்கில் தசதானந்துடிப்புகாணில் சொல்லுகிறேன் சாகான்காண்பிணிதான்தீருந் துஞ்சுகிறவிபர மதைச்சூட்டுறேனே ௭

துஞ்சியெழும்வாதபித்தமுயிர்தானப்பா சூட்சமாய்த்துன் றியதுசுழன்றுதேய்ந்து, மிஞ்சியேயஸ்திபற்றிக்குறுகித்தம்மில் மேவியமார்புள்ளேவாங்குமாகில், அஞ்சிப்பேபட்சமொன்றில் ல டங்குஞ்சீவன் அரகரா அவத்தைபித்து அறிந்துஇந்தப்பஞ்சியே சூஸ்திரமாம் வாதபித்தம் பக்குவத்தைநன்றாய்ப்பார்த் தரிதல்ந ன்றே ௮

வேறு-சமதாது.

அறிவதுவாதந்தானு மாத்திரையரைதானேடில்
செறிவதுபித்தமப்பா சேர்சமனென்றும்பின்னும்
பிறிவதுஅய்யந்தானும் பிரண்டதுகால்தானேடி
மறிவதுசமனதாகில் மயக்கமுமில்லைகாணே ௯

வாதகுணம்.

காணப்பாவாதமீறில் கால்கைகள்பொருந்திநோகும்
பூணப்பாகுடல்புரட்டும் மலஞ்சலம்பொருமிக்கட்டும்
ஊணப்பாகுளிர்நங்காச்ச லுடர்பெல்லாங்குத்துவாய்வு
வீணப்பாகுதமிருக்கும் வேர்வையும்வேர்க்குந்தானே ௰

பித்தகுணம்.

தானென்றபித்தமீறிற் சடமெல்லாங்காந்தல்காணு
மூனென்றவாந்திவாய்நீ ரூறியேஒழுகுஞ்சாவான்
வாவென்றமட்டில்வேகும் மண்டையில்குத்துண்டாகும்
தேனென்றவிக்கல்மூர்ச்சை செவியடைப்புண்டாப்பாரே ௧௧

சேத்துமகுணம்.

பாரப்பாஅய்யமீறில்பாசத்தினனல்தாமீறும்
நேரப்பாஇளைக்குந்தேகம் நெஞ்சுடன்விலாவுநோவான்
தாரப்பாசுரமுங்காயும் சர்தமுமொருக்குநாளில்
ஓரப்பாரெத்தங்கக்கு முடல்வறந்துஞ்சுரப்பேளுமே ௧௨

நாடிநடை,

ஆமப்பாவாதந்தானு மனநடைகோழியாமை
தாமப்பாபித்தந்தானும் தவளையப்போலேபாயும்
போமப்பாஅய்யந்தானுஞ்சர்ப்பம்போலோடுமோடும் ....
நாமப்பாகண்டுசொன்னோம் நரம்பொன்றில்நாடிமூன்றே, ௧௩

மூன்றுபேர்நிறமுஞ்சொல்வேன் முதல்வாதங்கறுப்புச்செம்மை
மான்றியபசுமைப்பச்சைமஞ்சளாயிருக்கும்பித்தம்
தோன்றியவெண்மையப்பா சோர்வில்லைவையமாகும்
ஊன்றியநிறங்கள்சொன்னேன் உத்தமரறிவார்தாமே ௧௪

பஞ்சபூதவகை.

தானென்றவஞ்சுபூதஞ்சதையெல்லாம்பிருதிவாகும்
மானென்றரெத்தந்தண்ணீர் மைந்தனேயப்புவாகும்
தேனென்றவெதுப்புத்தானும் தேயுவின்கூறேயாகும்
மானென்றவாசிதன்னில் வருகெந்தமறிதல்வாய்வே ௧௫

அறிந்திடுமெல்லாமொன்றாயாலிக்குந்திறவர்னந்தான்,, பிறிந்திடும்பூமிதானும்பேரெழிநாசிதன்னில், செறிந்திடுமப்புதானுஞ்சோர்ந்திடும்நாவிலேதான்முறிந்திடுவன்னிதானுமூன்றிடுங்கண்ணிலேதான் பறிந்திடும் வாய்வுதானும் பரிசிக்குமெங்கும் பாரே ௧௬

பாரப்பாகாதிலேதான் பரிசிக்கும்வானமைந்தா
போரப்பாவஞ்சுபேர்க்குள் பொல்லாதபேர்தான்மூவ
ராரப்பாவாதம்வாய்வு அப்பனேபித்தம்வன்னி
நேரப்பாவையமப்பு நிறைந்தவையிதுமூன்றுமே. ௧௭

ஆமப்பாமூன்றுபேர்க்குள் ஆகாரம்வாய்வேயாகும்
ஏமப்பாவாய்வுசேரி லெண்பிலமுடைத்தாய்நிற்கும்
வேமப்பாசிக்கின்றகூடில்வெந்துநீறுகமூளும்
நேமப்பாசிக்கின்றநோயெல்லாந்தணிக்குந்தானே ௧௮

தோஷகுணம்.

தானென்றவன்னிவாயு தாண்டிமேற்கொண்டதானால்
தானென்றசுரத்தாற்றேடங்கனதாபமிகுதியாகும்
தானென்றவன்னியோடு அப்புவுஞ்சாறுமாகில்
தானென்றசீததோஷஞ் சார்ந்திடும்தப்பில்லாதே ௧௯

தப்பிலாத்தோஷந்தானுஞ் சார்ந்திடும்வாறுகேளாய்
கப்பிலாவன்னிவாதங்கடுந்தோஷஞ்சாத்தியமாகும்
செப்பில்லாப்பித்தத்தோடு சேரணல்வெண்மையாகிச்
செப்பிலாவையதாஞ் சிவப்பெனும்வாயுவாமே ௨௰

வாய்வுதானடங்கிற்றானால் மைந்தனேதோஷம்போகும்
வாய்வுதான்பெருத்ததானால் மண்ணொடுநீருமொன்றும்
வாய்வுஞ்சலந்தான்ரெண்டால் மைந்தனேவன்னிமாளும்
வாய்வுதானண்டஞ்சேரில் மண்டலஓசையாமே ௨௧

தோஷக்குறி.

ஆமப்பா ஒண்சயேழு மலரொளிவிழியுஞ்சாகும்
நாமப்பா நாடிமூன்றும் நாவினிலிரண்டதாகும்
ஓமப்பா விந்தநீர்மை யுணர்ந்தவர் யோகியாகும்
வேமப்பா நாசிதன்னில் விழுகுறி விளம்பக்கேளே ௨௨

மரணக்குறி.

கேளப்பா தினந்தான்மூன்று கெடியிடைகலைதான்பாயில்
வாளப்பாவருட்டர்ரெண்டில் மறலியூர்புகுவான்பண்பாய்
நீளப்பா தினமிரண்டும் பின்கலைதானேபாயில்
மூளப்பாதேகந்தானு மூவிரண்டில்மரணமாமே ௨௩

மரணமாந்தினமாம்பத்து வுபயத்தில்வாங்குமாகில், மரணமாந்திங்களொன்றில்மைந்தனே கண்டுகொள்வாய் மரணமாமூக்குவிட்டுவாய்வழிவாய்வுபாயில், மரணமாந்தினந்தான்மூன்றில் வளர்பெறவறிந்துபாரு, மரணமாமலங்கள்மூன்றும் வற்றினால் பட்சமொன்றே. ௨௪

வேறு

ஒன்றாகவாய்நீ ரூறிரவிமேலுமியத்
தன்றாகதானுமிரவி மறைந்திருந்தக்கால்
ஒன்றாகமூன்றுதிங்கள் பொறுத்தவுடன்பொன்றிடுவார்
நன்றாகநிழலலையில் வீழ்வர்காண்பட்சம்ரெண்டே, ௨௫

வேறுதோஷவகை.

காணப்பாதோஷங்கள் பிறக்கும்போது காணுநீகுறிசொல்வோங்கருதிப்பாரு, தோணப்பாவுண்ணாக்குவுதடுகளஞ்சுசுகமான காதுபல்குறுகுமாகில், வீணப்பா தினமூன்றில்மரணமாகும் மேலானவன்னிக்குத்தோஷமென்பார், ஊணப்பாவற்றியின்றபித்தத்தோர்க்குஉடம்புபருத்துதிறலுணாக்கக்கேளே. ௨௬

கேளப்பாமதியாறில்சாவுண்டாகும் கேடிலைமத்தால்விளைந்ததேகமானால், நாளப்பாதிங்களொன்றில் சாவார்சொன்னேன் நலமானசிவகளைநாட்டங்கேளு, வேளப்பாபேலேறிநடந்துதானால் மேன்மையுடன்சிவகளைவிடுபடாது, தாளப்பாகீழ்நோக்கிநடந்துதானால்தவறுவருஞ்சிவகளைநாடிதானே, ௨௭

வேறு

தானென்றநாடிகீழேதாண்டியேவாங்குமாயில், தானென்றவுயிர்தான்மாளுஞ்சாதகமின்னங்கேளு, தானென்றமூன்றுநாடிதன்வசங்குறைந்துபின்னுந், தானென்றவாதபித்தந் தப்பித்து ஐயமீறில், தானென்றதிடங்கொண்டாலுஞ் சாவதுதிண்ணந்தானே. ௨௮

## தோஷநிவர்த்தியறிய.

ஆமப்பாவாதபித்தத் தன்மையை அறிந்துகொண்டு
நாமப்பாமருந்துசெய்ய நலமுறுதோஷந்தீரும்
வேமப்பாபித்தமானால் வெம்பிடுமுயிர்தான்காணும்
போமப்பாவாதம்நிற்கில் பொருந்தியமருந்துநலமே உகூ

நல்கியமூன்றுநாடிநரம்பெலாங்குதித்துப்பொங்கி
இல்கியமேவுன்மேலேயேறித்தானோடுமாகில்
மல்கியமரணமில்லை மறிந்துநீகிழேசாடி
ஒல்கியவுயிருக்கீன முற்றுநீயறிந்துகொள்ளே நூ0

அறிந்திடவுந்திக்கீழே யமஷியாய்குதிக்குமாகில்
எறிந்திடவுயிரையுண்ணு மெய்யுமாதோஷமப்பா
செறிந்திடாதுந்திதானுஞ் சேறிடம்வாய்வுக்கப்பால்
மறிந்திடாதசநாடிக்கு மகத்தானவீடாம்பாரே. நூக

பாரப்பாநோயுள்ளோர்கள் பக்குவம்பார்த்துநீயும்
வாரப்பாவுமிந்திட்டாக்கால் மைந்தனேதூரப்போகில்
கூறப்பாதர்க்கித்தானால் குறைந்தவன்சாகான்கேளு
சாரப்பாகிட்டவீழிற் சாவதுசடுதிகாணே நூஉ

## மந்தம்வருமாறு.

காணப்பாமுறைபாடெல்லாங் காண்பதுமந்தத்தாலே
பூணப்பாமந்தமானால் புகுந்திடும்வாய்வுதானும்
வாணப்பாநோய்களெல்லாம் வாயுவால்வளரும்பாரு
மூணப்பாவப்புவன்னிமுத்தோஷமூன்றும்பாரே நூநூ

பாரப்பாமந்தமுண்டாம் பரிசனமுரைக்கக்கேளு
காரப்பாமிகுந்துமெத்தக் கபளிக்குமன்னத்தாலே
வாறப்பாவிறைச்சியாலும் மாப்பண்டத்தாலுந்தானுஞ்
சேரப்பாமேதிப்பாலால் சேர்ந்திடுமந்தந்தானே நூச

தானென்றவன்னத்தாலே தலைபட்டவுடம்பிதப்பா
தானென்றவன்னமப்பா தனிப்பழிகொண்டுமீறில்
தானென்றவன்னமெல்லாஞ் சகலவித்தாகும்பாரு
தானென்றதானுக்கெல்லாந் தத்துவமுரைக்கக்கேளே நூரு

கேளப்பாவெட்டைபித்தங் கெடியானவாதம்வாய்வு
வாளப்பாஅய்யஞ்சீதம் வாழ்ந்திடுமன்னத்தாலே
பாளப்பாவன்னந்தானும் பகையுடன்பழியுங்கொள்ளும்
வேளப்பாவன்னத்தாலே மேகங்கள்பிறப்பைக்கேளே நூசு

## மேகம் பிறக்கும் வகை.

மேகங்கள்பிறந்துநின்ற விதங்களைவிளம்பக்கேளு
ஆகங்களிறந்தபோதும் அப்பனேதினமுஞ்சென்று
போகங்கள்செய்யும்போதும் புகழ்மந்தங்கூடும்போது
பாகங்கள்பசியினோடு பருகுஞ்சையோகத்தாலே, ௬௭

சையோகஞ்செய்யும்போதுந் தனிநின்றசுழியேயோடும்
ஐயனேஅமுதந்தன்னை அடக்கியேஅனல்தான்கொள்ளு
மெய்யடாவிந்துகாணில் விழிவிழப்புண்ணுங்காணும்
மையடாமேகத்தாலே வளர்ந்ததுகிரந்திபாரே, ௬௮

கிரந்தியால்விரணமுண்டாம் கெடியதிற்சீபாமேகம்
முரந்தியவிரண்டினாலே யுலைவாயில்சூலைகாணும்
பரந்தியமூன்றினாலே பலபலமேகங்காணும்
துரந்தியலிங்கத்தாலே தொல்லைநோயெய்துங்காணே, ௬௯

தொல்லையாஞ்சுரத்தினாலுஞ் சூழ்கின்றவாயுவாலு
மல்லையேசெய்யுமாகி லன்னத்தைக்கட்டிடாதே
வல்லையேவன்னிராசன் வழியதுசெய்வேயானால்
தொல்லையேயில்லையப்பா சூழ்நோயும்வாய்வுதானே. ௭௦

வாயுவேமிகுந்ததானால் மைந்தனேமேல்மூச்சேறும்
வாயுவேமிகுந்துதானால் மலர்ந்திடும்விரணமெல்லாம்
வாயுவேமிகுந்துதானால் மலஞ்சலமிரணடுங்கட்டும்
வாயுவினாலேயப்பா வாருத்திரரோகமாமே. ௭௧

## ருத்திரரோகம்.

ஆமப்பாருத்திரரோகந் தானைமையுரைக்கக்கேளு
வேமப்பாவென்பிற்பாய்ந்து மிகவெஞ்சிறுருத்துண்டாகி
போமப்பாபித்தந்தன்னைத் ததும்பித்துப்போகொட்டாமல்
பாமப்பாபேசும்போது பதையாமற்சார்வார்பாரே. ௭௨

## வேறு . சுகசன்னி.

பதையாமல்செய்கின்றசன்னிமார்க்கம் பாய்கின்றவிதங்கேளுபண்பாய்நீயும், நிலையாகலெண்ணையுடன்தீர்த்தமாடி நிரம்பவேதயிர்கூட்டிப்பொசித்துப்பின்னும், குறையாதமந்தமுடன் புணர்ச்சிகூடில் கூட்டியேவாயுதான்கபாலத்தேறி, அதையாமலபோகிக்குமோகஞ்செய்யும் அப்பனேசுகியோடுசென்னியாமே. ௭௩

## வேறு.

சன்னிதான்றோன்றும்போதுஞ் சடமெல்லாம்வேர்வைகாணும்
கன்னிதன்சுகத்தாலடைந்தா கண்கள்தான்சிவப்பேயாகும்

வன்னிதான்காற்றுலேயா டிகத்தானதோஷமாகு
மின்னிதான்சுகத்தில்நன்ருய் விழுந்திடுங்காயந்தானே. ௪௪

## மூலரோகம்.

காயத்தில்மூலரோகங் கண்டிடும்விதங்கள்கேளாய்
பாயொத்தபசியில்லாமல் பட்சிக்கிலடக்கில்வாய்வு
மாயத்திலிருத்திக்கொண்டு மலமதையடக்கும்போதும்
ஓயத்தகுண்டலிக்கு ளூட்புகுவாய்வுகாணே. ௪௫

காணப்பாவாயுவாலுங் கனத்ததந்தவபான்றன்னைப்
பூணப்பாமலத்னைக்கட்டிப் புகையெனக்கருக்கினாளுந்
தோணப்பாமுளேயைப்போலச் சுருக்கிமுனைமலந்தான்வீழில்
ஆணப்பா அபானந்தன்னை அழுந்தவேயிறுக்கும்பாரே, ௪௬

இறுக்கியமூலமொன்று ஏழுமண்டலமுமொன்று
வறுக்கியேபுண்ணுய்சீழ்தான் வடிகின்றமூலமாமே
உருக்கியேவாயுவாலே யுதிரந்தானகட்டிநின்று
தருக்கியகிறுச்சின்னங்கள் தான்ரத்தமூலமாமே. ௪௭

மூலமேயெழுந்தபோது மூலத்தில்கனல்தான்மாளும்
மூலமேயெழுந்தபோது மூளைவிந்துநாசமாகும்
மூலமேயெழுந்தபோது முழங்கவேயிரைச்சலாகும்
மூலமேயெழுந்தபோது முகிலில்லாக்கழிச்சல்தானே; ௪௮

## வேறு.

கழிச்சலென்றகிராணியிலேவிதமாறப்பா கண்டபித்தமனல்வாத
ம்வாயுவாகும், அழிச்சலென்றஐயசீர்மூன்றுங்கூடி அப்பனேபேதிக்
கும்பிலந்தான்போகுக், தெழிச்சலென்றவாய்வுதான்மேகபேதி இறமா
னமூலத்தின்தோஷபேதி, பழிச்சலென்றசங்கானபேதியொன்று பார
ப்பாவாயுவொன்றுஆறும்ச்சே. ௪௯

## வேறு. மேகத்தின்குணம்.

ஆச்சப்பாமேகங்கேளு அப்பனேமூன்றதாகும்
நீச்சப்பாமேகந்தன்னை நிசஞ்சொன்னேன்காணுகாணு
காச்சப்பாமஞ்சள்போலக் கவிசனந்தன்னிற்கணடால்
வீச்சப்பாபித்தமேகம் விளம்பினுர்விரும்பிக்காணே. ௫௰

விரும்பியேசீலைநாளும் வெளுத்திடில்வாதமேகம்
மருவியகவிசனந்தன்ன் மயிலதினிறமேயாகும்
திரும்பியஐயத்தாலே சேர்ந்திடுமேகமாகும்
சுரும்பியமூன்றுலப்பா தோன்றிடுங்குணங்கள்கேளே. ௫௧

கேளப்பாபித்தம்வாய்வு கெடியுடன்சேருமாகில்
தாளப்பாருளமான தமரிலேயெரித்துவேகும்

விழப்பிநீரைக்கட்டும் விஷம்போலக்கசியும்பாரு
பீரப்பாசிலநேரந்தான் பளிச்செனப்பிறக்குந்தானே. ௫௨

தானென்றவாய்வொதுங்கில் தண்டினில்நோவுகாணும்
வானென்றமந்தத்தாலே வாயுவுட்புகுர்தேசாடும்
கானென்றவெரிச்சல்காணுங் களலடைப்பாகும்பின்னே
மானென்றவாதம்வாய்வு மருவிடில்வெள்ளைகாணே. ௫௩

வெள்ளைதான்மெத்தவீழில் மேனியும்பொருமிக்காணும்
கள்ளமேசரீரமெல்லாங் கறுப்புடன்றழும்புமோடுங்
தள்ளவேதாதுநட்டந் தாகமுமிகுதியுண்டா
முள்ளதுசொன்னோம்நாமு முற்றுணர்ந்தறிந்துகொள்ளே. ௫௪

அறித்திடாவாயுவோடே ஐயம்வந்தெய்துமாகில்
பிறிக்கிநீர்பொசிந்தியாது பிறவெள்ளைவீழ்ந்திடாது
எறிந்திடுந்தீயேபோல இளைப்புடனிருமலுண்டாய்
மறிந்திடும்புகைச்சல்காணும் வலித்திடுமேகந்தானே. ௫௫

வலித்திடும்வாதத்தானும் வளரையம்பித்தத்தானு
மொலித்திடுமக்தாமேகம் மொழுகிடுஞ்சுரந்தான்மாறி
சலித்திடுந்தாகமீறுஞ் சாப்பிட்டாலுடனேகாந்தும்
வலித்திடும்வாய்நீரோடு மழுங்கிவாயினிக்கும்பாரே. ௫௬

இனித்திடும்வாதமேகத் தியல்புநல்லெண்ணெய்பாலும்
பனித்திடுங்கள்ளுப்போலும் பதியில்நீர்போல்தானுடும்
கனித்திடுமேனியெல்லாங் காய்ந்திடும்வெளுத்துப்போகும்
தனித்திடுமேகந்தானும் சாத்தியமையந்தானே. ௫௭

ஐயமும்பித்தமுநதா னணைந்திடுங்காலந்தன்னில்
கொய்யுறுரெத்தந்தானும் கொப்புளித்தோடுந்தண்டில்
மையுறுங்கண்ணினுட்கு மகோதரம்பெருபாடாகும்
தொய்யுறுமேகமுண்டாந் துடர்ச்சியைமுறையாய்க்கேளே. ௫௮

முறைகேளுலன்பதப்பா முயற்சியால்வந்தமேகந்
துறைகேளுகெர்ப்பதாலுஞ் சூழ்கின்றமேகமொன்று
நறைபூத்தகூந்தல்நல்ல நாயகன்மோகத்தாலு
மறைபோற்றுங்கெற்பத்தாலும் வளர்ந்ததுமேகந்தானே, ௫௯

வளர்ந்திடுங்கெற்பத்தாலு மருவியமேகமஞ்சு
முளந்திடுந்தந்தியாகு முள்ளத்தில்மேகந்தானே
யளந்திடும்வெள்ளைகொட்டு மகோதரமாமேகந்தான்
தளர்ந்திடுமத்திமீறித் தண்டெலும்புருக்கியாமே. ௬௰

தணல்போலக்காயுமேகந் தண்ணீர்தான்பகையாமேகம்
முணக்கவேமுழுகுமாறில் முருக்குமாமேகந்தானும்

பிணக்கவேபசிதான்கேட்டு பேரொழுமேகந்தானும்
கணக்கவேவசையோகத்தை வர்ச்சிக்குமேகமாமே, ௬௧

ஆமப்பாகடுவஸ்துண்டா லாகியமேகம்பின்னு
மோமப்பாபாஷாணத்தா லுற்றிடுஞ்சிலமேகங்கள்
நாமப்பாசொன்னேனிந்த நாடியாஞ்சூத்திரந்தன்னில்
ஏமப்பாவிதுதானேழு மஞ்சுமுன்னொன்பதாமே; ௬௨

குன்மவரலாறு.

ஆகியமேகந்தானு மப்பனேயிருபத்தொன்று
மேகியகுன்மந்தானு மெழுந்தோர்விதங்கள்சொல்வோம்
பாகியபித்தத்தோடு வாதமும்பரிந்துசேரில்
வாகியவாய்நீருறும் வாந்தியுமாகும்பாரே. ௬௩

பாரப்பாவாய்வுவாதம் பரிவுடன் அபானத்தோடில்
ஓரப்பாகும்பிதன்னி லுருண்டுதான்மிகவேநோகும்
சீரப்பாநெஞ்சில்குத்துங் குடலையுமுருக்கிக்கொண்டு
வாரப்பாவலிக்குமெத்த வாதமாய்வழங்கும்வாய்வே, ௬௪

வழங்கியஅப்புவோடு வாதமுமொன்றேயானால்
தழங்கியஅன்னசாரம் சத்திக்கவொட்டாதப்பா
முழங்கியதிதானந்தப்பிப் பிடியன்னமேறில்குத்து
முழங்கியமுறுக்குமேறில் உயிரையும்வதைக்கும்பாரே. ௬௫

வதையுறுவாயுவோடு மேகமுமருவுமாகில்
புதையுறுமலசலங்கள் பரிவுடன்கட்டிக்கொள்ளு
மதையுறுமிடதுபக்க மைந்தனேவலதுபக்கம்
பிதையுறுமுறுக்கிக்குத்தும் பெருஞ்சூலைகுன்மமாமே. ௬௬

சூலைவருமாறு.

குன்மமோரிதுதானுமிக் கூறிலெண்விதமாம்பாரு
வன்மமாம்நோய்கட்கெல்லா மகரநோய்தான்பொல்லாதாகும்
கன்மமாஞ்சத்துக்கெல்லாங் காணுங்காணிந்தரோகம்
நன்மையாந்தன்மத்தோர்க்கு நந்தாலும்காட்டிடாதே. ௬௭

நாட்டியபித்தசூலை நடத்தியவுறவைக்கேளும்
ஊட்டியவன்னமுண்ண ருசிதப்பிவாந்தியாகும்
மாட்டியகைகால்சந்து வகையுந்தன்மேலும்நோகு
நீட்டியவங்கங்கேதான் நின்றெரிந்தூறுங்காணே, ௬௮

காணப்பாவாதசூலை காட்டுந்தன்குறியேதன்னில்
காணப்பாகைகால்சந்து குளைச்செலலாங்கடுத்துநோகும்
காணப்பாவயிறுவிம்மிக் கனத்துடன்சுரப்புங்காணும்
காணப்பாதேகமெத்தக் கத்திடுமிளைப்பதன்றே, ௬௯

இளைத்திடும்வாதசூலைக் கெய்தியகுணங்கள்செய்வோம்
குளைத்திடுங்கைகால்நெஞ்சு குத்துடன்வரண்டிருக்கும்
தளைத்திடுமார்பில்சென்று தாக்கிமேலேறிவெட்டு
மளைத்திடும்சீப்தான்கக்கு மாகாதவைபமாமே, எ௰

ஆகாதவாதபித்த மணைந்திடுஞ்சூலைகேளு
வாகானகால்கள்கையில் வளமுடன்கரடுகட்டும்
தாகானமேனியெல்லாந் தடிப்புடன்வெடிப்புண்ணாகி
போகாதவ்சாத்தியமாகிப் புணர்ச்சியால்சொல்லுந்தானே, எக

சொல்லியேவையத்தோடு பித்தமுங்கூடிற்றானால்
வல்லியமபோலக்குத்து மைந்தனேயெலும்புதோறும்
மல்லியசரீரம்நோகும் வரிசையாய்சுரமுங்காணும்
மெல்லியதனுத்தான்றற்றும் விடங்கக்குமிருமுந்தானே, எஉ

தானென்றவையத்தோடு சமவாதசூலைகேளு
கானென்றகாலிவாணி யெலும்பெலாங்கறுத்துக்கேட்டு
கோனென்றகழிச்சல்வாங்காக் குளிர்சுரமாறலாகி
மானென்றதாதுநட்ட மறுசூலையாறும்பாரே. எங

ஆறுகுஞ்சூலையப்பா வகிலொன்றில்மூன்றுசூல்
வேறுகும்பதினெட்டாகும் வெவ்வேறுசூலையில்லை
கூறுகவிதனைப்பா குணங்கள்தான்கோடியாகும்
பேறுகுமிவர்கள்பேரைப் பிரித்துரைசெய்வோம்பாரே. எச

பாரப்பாகெர்ப்பகாரம் பரிவுடன்வாய்வுதேய்வு
சேரப்பாபுந்தியோடு சென்றிடிற்கருத்தான்மாளும்
வாரப்பாபுழுத்தானுண்ணின் மலமெனச்சொலவாரப்பா
ஆரப்பாவிதனைப்போக்கி லாண்பிள்ளைசெனிக்குந்தானே. எரு

செனிக்கின்றகுழவிதானுந் திடத்துடன்பிறக்கும்போது
கனிக்கின்றசீய்நீர்போலே கலந்துள்ளேகட்டிநிற்கும்
பனிக்கின்றவிடுப்புக்கைகால் பரவியேநொந்துகுத்துந்
தனிக்கின்றபசிதான்போகுந் தடித்திடுமழுதம்பாரே. எசு

பாரியவாய்வுகாணும் பரிவுடன்குழிதான்சேரில்
தாரியகழிச்சலாகிச் சதாநித்தமுறுமிச்சாடும்
வாரியதேகமெல்லாம் வலியெழுமிடைதானோகும்
மாரியனெக்குச்சொன் னையந்தவர்சித்தர்தானே. எஎ

தானென்றகெற்பத்தோடு தரித்திடுஞ்சோரைகட்டில்
வானென்றமத்துப்போல் வாயுவுமுருளும்பாரு
ஊனென்றபசிதான்போகு முளைந்துதானிளைச்சலுண்டாம்
மானென்றகழிச்சல்மீறும் வருஞ்சூதவாயுவாமே. எஅ

சூதானகெர்ப்பகாலஞ் சுற்றியேவிந்துகொள்ளில்
வாதானமேகமிறி வழங்கியேசெனிப்பிக்குங்காண்
போதானவுட்மபதெல்லாம் புண்போலேமிகவும்நோகும்
நீதானமயக்கமாகி நிற்சிவனுகுவானே. எ௬

ஆகின்றவாறுசூலே கெர்ப்பத்திலடர்ந்தநோய்காண்
பாகின்றவவைதான்சூழில் பலித்திடாக்கருவுமப்பா
வாகின்றதிதுதான்போக்கில் மலடிதான்பெறுவாள்பிள்ளை
யாகின்றநோய்கட்கெல்லா மறைந்திடுமுறைபாடாமே, அ0

கெர்ப்பசன்னி.

முறையானகெர்ப்பந்தன்னில் முயன்றதோர்சன்னிகேளு
முறையானசிய்நீர்க்குள்ளே புரைந்திடில்வாய்வுமீறில்
விறையானதேகம்வேர்க்கும் மெய்யெல்லாமயக்கமாகும்
துறையானமலந்தான்கட்டுஞ் சோபிக்குந்துணிந்துபாரே. அக

பாரப்பாமாதர்க்கெல்லாம் பச்சுடம்பாகுங்காலம்
தாரப்பாவனுபோகிப்பள் தனிப்பழங்காடியுண்பாள்
ஆரப்பாமாங்காய்திண்பா ளப்பனேமாவுதின்பாள்
கூரப்பாசன்னிபெய்துங் கொண்டிடுஞ்சன்னிகேளே. அ௨

கொண்டிடுமலடிக்கப்பா கூடிடுமெட்டுசென்னி
வண்டிதாள்ருதுகாலத்தில் மாரதின்பால்மோர்தானுண்பாள்
தண்டியேயண்ணவாள்பின்னுந் தனிச்சூதக்காயுந்திண்பாள்
ஓண்டியேபெண்களுக்கு ஓரெட்டுச்சன்னியாமே. அ௩

ஓரெட்டுச்சன்னியப்பா யுற்றதோர்பெண்களுக்கு
வாரெட்டுப்புருஷனுக்கு மகத்தானசுகசன்னிதான
நேரிட்டுப்பார்க்கும்போது நெகிழ்ந்ததுவெவ்வேறாகும்
பாரெட்டுமெச்சவேதான் பகர்ந்திடுங்கண்ணோய்கேளே. அச

கண்ணோய்வகை.

கேளப்பாபொடிச்சூடாலுங் கிளர்வெய்யிலதுகாய்ந்தாலும்
வாளப்பாமின்னூர்தம்மை மருவியேநித்தநித்தம்
காளப்பாமுழுக்கிலாதல் கண்ணினால்கனல்தான்பார்த்தால்
காளப்பாபாஷாணத்தால் னெழுங்கண்ணோய்பாரே. அரு

கண்ணினோய்தானுண்டாகுங் காரணமின்னஞ்சொல்வோம்
பண்ணுனமேகத்தாலும் பகர்வெட்டைவாயுவாலும்
தணணுனயப்புவாலுந் தனிமலக்கட்டினாலும
புண்ணுனவிரணத்தாலும் பொருந்தினகாரத்தாலே, அ௬

காரமாஞ்சாரத்தாலுங் கடிரசத்தூமத்தாலும்
நீரமாஞ்சரக்குகட்ட நிலையுறுப்புகையினாலும்

பாரோத்தபேதியாலும் பலபலதண்ணீராலும்
வீரமாமிவற்றிற்கண்ணில் செழித்திடும்வியாதிகாணே, ௮௭

குஷ்டவகை.

வியாதிகள்மூவாறுக்கும் விளங்கியகுட்டங்கேளு
சயாதியாமேகத்தாலுஞ் சூழ்கின்றகிரந்தியாலும்
பயாதியமாறதாகும் பலவண்டிஞலேயெட்டாம்
யயாதியாம்புழுவாலுலும் ஐயமாம்பதினெட்டாமே. ௮௮

ஆமப்பாநோய்கட்கெல்லா மரசிதான்மூன்றுநாடி
காமப்பால்வளர்ந்தெங்நாளுங் கருவியேகலந்துசேர்ந்து
வேமப்பாவெந்துநீறி விட்டமெல்லாம்பிளந்துபினனும்
சாமப்பாயிறக்குமந்தத் தாதுவின்விளக்கங்காணே, ௮௯

காணப்பாநாடிசொன்னேன் கலந்திடுகருவுஞ்சொன்னேன்
தோணப்பாநோயுஞ்சொன்னேன் சூட்சமும்வகுத்துச்சொன்னேன்
பூணப்பாயவத்தைச்செய்யும் பூட்டையும்விரித்துச்சொன்னேன்
வீணப்பாசொல்லவில்லை விதிமுறைவணங்கிக்கேளே, ௯௰

கேட்டிடும்நாடிபத்தில் கெடியெழுநாடிதள்ளி
நாட்டிடுநாடிமூன்றில் நயம்படுமிடையேதாதம்
மாட்டுபின்கலைதான்பித்த மையுதுசுழிதானாகும்
வாட்டிடுமேவமேவாத மருவிடும்பித்தநீரோ, ௯௧

பித்துற்றஐயம்விந்து பிரிந்தநம்பூதங்கேளு
உத்தநல்வாதம்வாய்வு ஓங்கியேபித்தந்தேய்வு
சுத்துற்றஐயந்தண்ணீர் சோர்வில்லைப்பின்னல்வாதம்
பத்துற்றபிராணன்பித்தப் பகையுறுசமானனையே, ௯௨

ஐயமாநாடிமூன்று லழிக்கவுமாக்கலாகும்
மையமேயென்றில்மூன்று நாடியாம்நல்லதாகி
மையறுங்கருவிக்கெல்லாம் வாசல்காப்பவரோயாகிச்
செய்யுறுதொழிகட்கெல்லாஞ் சித்துடன்சித்துமாமே, ௯௩

ஆமப்பாவெழுபத்திரா யிரநாடிபத்தில்மூன்றாய்
சோமப்பாவுந்திக்கீழே சுழிதனைப்பற்றிநிற்கும்
காமப்பால்விளைத்தெங்நாளுங் கருவியவந்துப்பின்னும்
சாவப்பாவிளக்குமந்தத் தாதுவின்வழக்கந்தானே, ௯௪

வளர்ந்திடுந்தாதுதன்னை வகையதில்துகையேசொன்னேன்
வளர்ந்திடும்வியாதிக்கெல்லாம் கணியொடுகருத்தைச்செப்ப
வளர்ந்திடுஞ்சரக்குக்கெல்லாம் வகைசுத்திக்கேளு
வளர்ந்திடும்நோய்களெல்லா மருந்திலொழியுங்காணே, ௯௫

காவியத்தின்நாடி-முற்றிற்று-ஆக-செய்யுள்-௯௫௨.

(*)

## வல்லாதியின் வயித்தியநாடி பரிட்சை.



" நாடுவாய்நோய்வருவ தேதென்றுக்கால் நவிலுவோ மதிபோகச் சையோகத்தால், சூடுவாய்மேகமுண்டாய்வாய்வுசேர்ந்து சேரவேநோயாச்சுதிடமும்போச்சு, கூசுவார்கெற்பத்திற்புணர்ச்சிமீற கொல்லுமடாநோயப்பாகங்கூறக்கேளு, தேடுவார்தேகமது வெண்சாணீளம் செப்புவோமங்குலேந்தான் தொண்ணூற்றுறே, க

### நாடிநிதானம்.

தொண்ணூற்றுறங்குலத்தின் மூலந்தன்னிற் சொல்நாடியெழுபத்தீராயிரந்தான், தண்ணூற்றுமிகல்நாடி பத்துமாகுந் தப்பாதுயிது மூன்றும் தூக்கிப்பாரு, விண்ணூற்றிபெழுபத்தீராயிரந்தான் மிகுந்த நோய்தனிற்சுருக்கம்விறைந்துபாரு, எண்ணூற்றுத்தொண்ணூற்று ஐயஞ்சிலேற்று மிதுதுகையிற்றசைநாடிப் பகுத்துக்காணே. உ

### தசநாடி.

காணுவாயிடைசுழினைபின்கலையினோடு காந்தாரிசிங்குசங்கினியசனியோடு, பூணுவாயலம்புருடன்சிங்குவையுமல்லாற் புகழிமிவர்செய்தொழிலும்பொருந்துமிடங்கேளு, காணுவாயிடதுகாலங்குட்டத்திருந்து கத்திரிமாறுயிடதுநாசிதனிற்பாயும், பேணுவாய்பின்கலைதானிடதுகாலின் பெருவிரலிலிருந்துகத்திரிமாறலாமே. ௩

ஆறுனவலதுநாசியினிற்சாரு மப்பனேசுழிமுனை மூலத்திருந்து மேலே, வீறுனஆக்கினையுமட்டும்பாய்ந்துவிதுதானுமுச்சிலஞ்சிறுவாணியாகும், பேறுனசிங்குவையு யுண்ணக்கில்நின்றும் பேணியுண்ணுமன்னத்தைக்கீழேபாய்ச்சுஞ், சோறுனபுருடனதுகண்ணிற் சோதியுடன்பார்வைகொடுந் தொழில்கண்டீரே. ௪

தொழிலானகாந்தாரியிடதுகண்ணிற் சோதியுடன்பார்வைகருஞ்சூட்சமாகும், நெழிலானஅசனையதுவலதுகாதில் நிற்குமடாஅலம்புருடனிடதுகாதில், குழலானசங்குனிலிங்கத்தில்நின்று கொடிபோலசுற்றுமடாகூறினேனுன், எழிலானகுகுதன்பானத்தைக்கொள்ளு யியம்பவேதிசைவாய்வை யிசைந்துகேளே. ௫

### தசவாய்வு.

இசைந்துகேள்பிராணனுனபானன்சானு மெழிலானவியானனுமுதானன்கூற்றம், அசைந்துகேள்தேவத்தன்சமானநாகன் ஆதிரிகரணன்மனஞ்செயனிவர்கள்பத்தாம், பிசைந்துகேள்பிராணன்மூலந்திருந்து பின்மகலேயோடிடைநடுவாய்கையில்மட்டும், பிசைந்துகேள்முடியாது நாசியூடுபன்னிரண்டங்குலம்பாயுந்தாமே. ௬

## சுவாசத்தொகை.

நாளேதுபத்தெட்டுஉள்ளேபாயும் நாழிகைக்குமுன்னூற்றியிருபதாகும்; ஏலேதுநாலொன்றிற்சுவாசந்தா மிருபத்தோராயிரத்தியாறுநூறப்பா, மேலேறும் பிராணநெஞ்சில்நின்றுபோகும் விளங்குமேதிரிகன்றும்பலேயுண்டாக்குப், சாலேகுங்குருதனுடன்பான்னின்று கழிக்கிமேமலசலத்தைதக்கருதிப்பாரே. 7

பாரடாநாடிதனிற்சமானனின்றும் பருகியதோரன்னத்தைச்சேர்க்கப்பண்ணும், ஊரடாவதானகண்டத்தில்நின்றுஉண்டவன்னபானத்தை தக்கிமேழ புரய்ச்சுப், வீரடாநாகன் விக்கலேயுண்டாகும் வியானன்மேலோங்கிவந்ததைலமல்லால், வாரடாவிருத்திதனையுறுப்புக்கெல்லாம் வளமாகப்பாய்ந்துமேயிருகும்பாரே. 8

பார்க்குமேகூர்மனதுகண்ணைமூடி பணதிறக்கச்சிமிட்டனுடன்பண்ணுவன்பார், ஊர்க்குமேதேவதத்தன்செயுல்கோட்டாவி யுடம்புமுறுக்குண்டாகுமுண்மையாக, கார்க்குமேதனஞ் செயந்தானுயிர்போனக்காற் கபாலத்தில்நின்றுடம்பையூதப்பண்ணும், ஆர்க்குமேமண்டைதனைச் சிறிப்போவா னப்பனே சொல்லிவிட்டே னறிந்துகொள்ளே. 9

## திரிநாடி.

கொள்ளப்பாதிசைநாடிதன்னில் மூன்றுகூறுவேனிடைசுழினைப்பின்கலேதானென்றும், விள்ளடாதிடகலேதானிமிரமாறி மிருந்தாக்காலுங்குட்டந்திருந்துயேறி, கள்ளாகண்டத்தில்மாறியோட்டிகபாலவளைதனி லூடியார்பிர்பாய்ந்து, தள்ளடாவலது கரம்பின்கலேயினோடு தகித்தமிடையிடதுகரஞ்சாருந்தானே. 10

சாருமடாசுழிமுனைதானடுமையத்தில் தாதுயிதுமூறுலே தாக்கிப்பாரு, பெருமடாபிடையதுதான்வாதமாச்சு பின்கலேதான்பித்தமடாபேணிப்பாரு, சேருமடா சுழிமுனைதானையமாகுஞ் செப்புவேன் திசைவாய்வில்மூன்றுவாய்வு, ஊருமடாவாதபித்தஞ்சேத்துமத்திநோடு வொன்றாகச்சேர்ந்திருக்க வுறைக்கிறேனே. 11

## திருநாடிவிபரம்

உரைக்கிறேன்அபானனதுவாதஞ்சேரு முற்றுப்பார் பிராணனதுபித்தஞ்சேரும்; நிறைக்கிறேன்சமானனது ஐயஞ்சேரும் நேர்வாதம்வாய்வுபித்த நெருப்பதாகும், தரைக்கிறேன்சிலேட்டுமமதுத

ன்னீராகுஞ் சாணுமுதலுந்திமட்டும்வாதம்வீடு, விரைக்கிறேன் வுந்தியின்மேல்மார்புமட்டு மிக்கபித்தமிருப்பிடமாய்விளங்குந்தானே

தானென்றமார்பின்மேலுச்சிமட்டுந் தான்கபமேயிருக்குமடா சல்லிபோலே. வானென்றவாதமதுதுவக்கிற்சோதி மயிலோணுன் கோழியன்னமாதுபோலுங், தேனென்றபித்ததனை நோக்கிமேலே சென்றேறி சாயலன்றித் தெளிவாய்நிற்கும், நானென்பித்தாடையா மையட்டை நல்லபுறுபோற்சாய்ல்நாடிப்பாரே. 13

நாடிநடை.

நாடிப்பார்வாதத்தைநோக்கிப்பாயும் நன்றாகச்சிலேட்டுமந்தாணுகப்போலுள், கூடிப்பார்மண்டூகம்போலேயேறிற் சுருக்கில்லை கனமில்லைமெலிந்துநிற்கும், ஆடிப்பார்வாதமொன்றுபித்தம்பாதி ஐயங்கால்பாங்காணல்கடமேயில்லை, தேடிப்பார்மூவிரலுஞ்சமனாயோடிற் றீராதுபிவைசன்னிவாதந்தானே. 14

வாதநிதானம்.

தானென்றவாதமதுகோழிபோலே சாவலைப்போல்பித்தமது தாண்டுமாகில், கோனென்றவாதபித்தந் தொந்திப்பாகுங்குறுதியாய்வாதமதுவோணுன்போலுங், கானென்றஐயமது சர்பம்போலுங் கதித்திடுமேவாதமையந் தொந்திப்பாகும், ஊனென்றபித்தமதுஆமைபோலு மோடுமேஐயமண்டூகமெண்ணே. 15

பித்தநிதானம்.

எண்ணுமேபித்தமையந்தொந்திப்பென்று இருக்குமே அளவிடைதானின்னங்கேளு, மின்னுமேமணிகட்டின்கீழதாகப்பெருவிரலங்கிகுலத்திலப்பாமூவிரலைவைத்து, மண்ணுமேமூவிரலில் யிரைமில்நெல்லை வைக்குமிடம்விட்டுநீநாடிப்பாரு, முண்ணுமே மலணிக்கட்டுதனக்குமேலே மூன்றுவிரற்கடையளவில்துடித்தாற்காணே. 16

ஐபநிதானம்

காணுநீவாதத்தின்கோபமாகக் கருதுநால்விரற்கடைதான் பித்தக்கோபம், ஆணுநீஐந்துவிரற்கிடையில் தாண்டி ஐயத்தின்கோபமெனவறிந்துகொள்ளு, பேணுமேயிலயதுபோல் வாதமோடில்பெருஞ்சாரைப்பாம்பதுபோலையமேறில், ஊணுநீபித்தது அட்டைபோலு முட்சுருங்கற்சாவாமென் றுரைத்திடாயே. 17

மரணக்குறிப்பு.

உரைத்திடவேவாதமதுபித்தத்தை நோக்கி யோடவேபித்தமந்தஐயத்தேறில், நிரைத்திடுமேஐயமதுகண்டத்தேறில் நின்றுமேயு

ண்ணுக்கின்வழிபைமூடி, விரைத்திடுமேவாசலைகது மடைத்துகொள்ளு மேலானசீவகளைமெலிந்துபோகு, மறைத்திடவேகடிகையைந்தில்மரணமாவார் மழுவெடுத்தானுமைக்குரைத்த வசனந்தானே.

வசனமெனவாதமொடுசிலேத்மம் ரெண்டும்வலுவாகிபித்தமது மாய்ந்துபோகு, மசனமெனதொண்ணூறுகடிகைதன்னிலவர்மரணமாவதுண்மையறிந்துகொள்ளு, பிசனமெனவாதமொழயம்பாய்ந்து பித்தந்தான் புருவென்னதணிந்துநின்றால், விசனமென நாலுநாழிகையிற்சாவார் மெய்யென்று புலத்தியனேவறிந்துகொள்ளே. 19

கேளடாவாதபித்தங்கீழேநோக்கிற் கெடியானதுடிநாதம்வீணை நாதம், நாளடாபாம்பரணைவாலுபோலே நடுங்கினுநாயெலும்புகளைக்கவ்வியோடிற், சூளடாகிழிட்டுக் கடிக்கும்போதுஞ் சுத்திவரும் போலவுமேசுழன்றிட்டாலும், தோளடாபித்தஞ்சேத்துமத்திறுலேறி சினத்திட்டால்மெய்குளிர்ந்துதெரிக்குந்தானே. 20

தெரிக்குமேவயிற்று வலிநெஞ்சுவீக்கஞ் சிவந்திருக்குமஞ்சள்நிற்குங்கருகும்நாக்கு, எரிக்குமேமுகங்கோணுமிரவக்கப்பாளரிச்சலுண்டாய்பகல்குளிருந்திரேகந்தானு, முருக்குமேயடிக்கடிதாம்பெருமூச்செய்துமுழிமிரட்டுஞ்சாறுமாறுகப்பார்க்குங், குடிக்குமேயுள்ளங்கையுள்ளங்காலுங்குளிர்ந்திருக்குமுண்ணுக்கு குறியைபாரே.

குறிகேளுமேற் சுவாசந்தானும்பாயுங் குளிர்ச்சிகண்டுமூக்கண்றிவாயிற்பாயும், மறிகேளுமுடல்நடுக்குமறிவழிக்குமையா மைந்தனேவாடாதிருகில்வசையுண்டாகும், வெறிகேளுவுச்சிதனிற் சூடுண்டாகுமீள்வதில்லைவீழ்ந்திடுதல் மெய்யென்றெண்ணு, துறிகேளுபொறியரவந்தரித்தவீசன் சுந்தரிக்குச்சொன்னதிந்தசுருதிதானே,

நாடிமாத்திரை நிதானம்.

தானென்றவாதமாத்திரை தான்ரண்டு தப்பாது பித்தமது தானென்றேறில், வேனென்றவாதபித்தந்தொந்திப்பாகு மிகுவாதமிரண்டுஞ்சிலேத்மமொன்றுகில், ஊனென்றவாதமடங்கொந்திப்பாகு முற்றபித்தம்ரெட்டித்து வாதமொன்றுசேரில், கோனென்ற பித்தமுடன்வாதஞ்சேர்ந்து கொண்டதிந்தரோகமெனக்கூறுவாரே. 23

கூறுவேன்பித்தமாத்திரைரண்டாகில் கொடியசிலேற்பனமொன்றுகுதிக்குமாகில், தூறுவேன்பித்தசிலேத்மந்தானென்று துலங்கு

சிலேட்டுமமிரண்டுவாதமென்றும், சேறுவேன்சிலேட்டுமவாதந்தா னென்றுஞ் சிலேட்டுபமேநாடிபித்தமொன்றசேரில், வேறுநீநினை யாதேசெலுத்தும்பித்த மிருந்திடுமேசுரம்பேதி மிகுதிதானே. 24

மிகுதியென்றஐயத்தில்வாதஞ்சேரில் மேலொலும்பு நாகத்தின் பினைச்சல்போலே, தகுதியென்ற வாதமு மையஞ்சேரில் தாரணியில் மயிறகுபோலேயாகும், திகுதியென்ற பித்தமுடனையஞ்சேரில் தேறி லூர்தவளையொடுஅட்டைபோலாம், நிகுதியென்றஐயத்தில் பித்தஞ் சேரில் நீட்டரவுவாயில் பட்டஎலியுமாமே. 25

ஆமப்பாவாதமதுதவித்தபோது அப்பனேமயிர்சாயலாகிநிற் கும், தாமப்பாபித்தநடை பெருகவோடுஞ் சகித்துநின்றஐயமது அ மர்ந்துமீளும், ஒமப்பாமூவிரலுங் கரியேயாகி லுயர்ந்துநின்ற வாத பித்தமுற்றும்பாரு, வேமப்பாமலசலங்கள்கட்டேயானால்மிச்சமடா வாதமது விளக்கக்கேளே. 26

கேளடாகூடெழும்பிப்பித்தமிச்சங் கெடியாகக் குளிர்ச்சிகண் டாலாமூச்சங், தாளடாவாதமதுபித்தஞ்சேரில் தப்பாது சிலேட்டு மத்திற்பித்தஞ்சாரும், வேளடாஐயமது போலேயேறில் வேல்வத் தைக்கிடையாள மார்புமூக்கு, கேளடா புறங்கைகள் செவிகளோடு குளிர்ந்துமேவெதும்பிஐயமீறுந்தானே. 27

மீறிலேரகடிகையைந்தில் மரணமாவார் வெடிவெடித்தபித்தம துமீறினக்கால், கூறுவேன் வாதமையங் குளிர்ந்ததானல் கொள்ளு மடாபித்தசன்னி அறிவுபோகும், வாறுகேள்வாதமையமீறிற்றானல் வுருத்தபித்தமழிந்துதானல் மரணசன்னி, சீறியேயுட்புகுந்து பிறவி ச்சாதிரணததிலேயிசுவுவருந்திண்ணந்தானே. 28

திண்ணமுடனையத்தில்வாதஞ்சேரில் செப்புவேன்கன்னியொடு தோஷமுண்டாம், எண்ணமுடன்மேப்பிக்குஞ்சோபமுண்டாம் எ ழில்மூர்ச்சைசோகையுடன்பாண்டுகாணும், வண்ணமுடன்பித்தத்தி ல்வாதம்வந்தால் வரும்வாறுபீநிசங்கள் மண்டைக்குத்து, சண்ணும டாபவுத்திரங்களரையாப்புண்டாந் தப்பாதுநவமூலஞ்சாருந்தானே

சாருமடாபித்தமந்தவாதத்தேறில் தனஞ்செய்யும் பாண்டுகா மாலைதானுஞ், சேருமடா நீராம்பல்மகோதரங்கள் செப்பெரிய மக வைவைப்புப்பார்வைதானும், வாருமடா ஐயமதுபித்தஞ்சேரில் வா ஆறல்சுரம்பேதிவாந்திகாணுஞ், சேருமடாஐயமதுமீறிற்றானல் தோ ன்றுமடாசயகாசஞ்சுருக்குத்தானே. 30

## அவஸ்தை பத்து.

சுருக்கான அவஸ்தைபத்துஞ்சொல்லக்கேளு துடியானமுதல வஸ்தைபிராணமோரது, முருக்கானவிரண்டுகளம் வேற்றுமையேகூ று மூன்றுக்குந் தெளிவது நாற்றபாகும், அருக்கான காலிலேமேலி ளைப்புகாறு மைந்தர்க்கு முகம்வேர்க்குமாறுக்கப்பா, நறுக்கானயு டம்பதுவுங்குளிருமேழில் நன்றான அன்னத்தைநாடும் பாரே. 31

நாடுமேபிருந்தான்கில்கண்பஞ்சாடும் நலமாகவொன்பதிலேயுட ப்புவேர்க்கும், ஓடுமேபத்துக்குமரணமாவார் உத்தமனே அவத்தை பத்து முறைத்தேன்பாரு, தேடுமேயலனூலுமறிந்துகொண்டு தேசத் தில்வைத்தியந்தான்செய்யவேண்டும், கூடுமே அசாத்தியமசாத்திய மதின்குணங்குறியுங்கண்டுகூறினேனே. 32

## கற்பகவுற்பத்தி.

ஆண்மையென்றுமங்கைடர்கள்பூர்க்குங்கால் மன்றுமுதல்பதி றுநாளுமத்த, தாண்மையன்றிப்பதிறையிறழாய்கின்ற தாமரை போல்மலர்ந்திருக்குஞ்சாற்றக்கேளு, கூண்மையன்றிதினமொன்று யிகழ்தானென்று கருவானகருக்குக்குழிதான் மின்னட்குள்ளே பா ண்மையென்றவிந்தங்கேயூறும்போது பாயுமடாவன்னியொடுவாய்வு தானே. 26

வாயுவொடுவிந்துசென்று மலர்க்குட்சேர்ந்தால் மலரினுள்ள யிதழ்களெல்லாமூடிக்கொள்ளும், தேய்வோடுவாய்வுநின்று திரட்டு ம்பாரு செப்பரிதினமொன்றில்கடுகுபோலாம், சாயுமடாநாளிரண் டில்மல்லிபோலாந் தப்பாமல்நாள்மூன்றில்மிளகுபோலாம், சேயும டாநாலாநாள்விதைபோலாகும் சேரவைந்தாநாள் குமளிபோலாம்.

ஆகுமேஆறுநாள் நெல்லிக்காய்போ லானநாளேழுக்குபின்னை க்காய்போல், ஏகுமேயெட்டாநாள்பஞ்சபூத மீதினுண்டாம்பஞ்சவ ர்னம்போலேதோன்றும், போகுமேநவதினத்தில்காக்கை முட்டை ப்போகும்பத்துமுதலந்துநாளும், வேகுபேகோழி யண்டவடிவதா கும் விள்ளுகிறேன்திக்களொன்றில்வாழைப்பூவே. 35

பூவிலேயிரண்டுதிங்கள்கழுத்துண்டாகும் புகழ்சிரசு முதுப்பா குமூன்றுந்திங்கள், தாவிலேசந்துக்கால்கையுண்டாகி சட்டகப்போ ல்வடிவாகிவிரலுமுண்டாம், நாவிலேவாய்நாக்குமூக்குமுண்டாம் ந விலுகிறேன்மாதமைந்தில் செவியுண்டாகும், பாவிலேயாறுதிங்கள் குய்யத்துவாரம் பாலுக்குமேழுக்கும்நரம்புதானே. 36

நரம்புதானெழுபத்திராயிரந்தான் நாடியெட்டாந் திங்களுக்கு இருண்டாமே, உரம்புவேதாய்பொசிக்கு மன்னசாரமுச்சிறழிதானி

றங்கியுடல்பெருக்கும், வரம்பெறவேயொன்பதிலே உயிர்தான்வந்து மறைஞானமுண்டாகுமுச்சிவழிமூடும், நிரம்பவே தசைமாதஞ்செருவிலிந்த நெருப்போவோய்வுமிஞ்சிக்கவிழ்த்துந்தானே. 37

தானடாசிரந்திரும்பிபிறந்தபிள்ளை தனக்குயிர்மசிருஷ்டிதூராண்டுதன்னில், ஏனடாவாலையதுவோரைந்தாகு மிருபதுதானுமட்டும்வளரும்பிள்ளை, நானடாவொளிபோகுமுப்பற்ரண்டில் நாற்பதுக்குளழகுபோ நாடிப்பாரு, வேனடா அன்பதுதான்வயதுதன்னில்விரைந்துபிரிதிவிலப்புமேவும்பாரே. 38

மேவையிலேயுளல்தளரா மப்புச்சென்று விளங்குமணல்தனை நோக்கிவெளுக்கும்ரோமம், தாவையிலே யறுபதாங்வயதுதன்னில்தண்ணீருமண்ணுடனேசார்ந்து கொள்ளும்,பாவையிலேகண்ணொளியுங்குறைந்துகாட்டும் பாலகனேநடக்கில்வெகு தடைதான்பண்ணும், கூவையிலேயெழுபதென்ற வடதிற்றேய்வு கொண்டலேதாநெருக்குமனல் தாதிற்காணே 39

காணவேதாதுலருமறிவுப்புகுன்றுங் கருதிப்பா ரென்பதென்றவயதிற்ருனும், தோணவேவாய்வுவந்து வெளிவிற்பாயுஞ் சுவாசமேல்நோக்குமடாதொண்ணூற்ருண்டில், பூணவேயாகாசஞ்சிவனோடு யுலன்கனைந்து வசமாகப்பொருந்திக்கொள்ளும், நாணவேயிந்திரியமற்றுப்போகும் நலமில்லை நூருண்டில்மரணந்தானே. 40

தானென்றபிரமசிருஷ்டிவயது நூறில் தந்தைதாய்தான்செய்த கருமந்தன்னால், வேனென்ற அவமிருத்துவந்து கூடிவிஷகடிகன்வெட்டுகுத்துமிகவுண்டாகி, கானென்றமிருகத்தால்நஞ்சைதின்று கனவயதுகுன்றுமப்பாகருதிப்பாரு, நானென்றபிரமசிருஷ்டி காண்பிக்கவில்லை நாதனுருமைக்குரைத்தார் நாம்சொன்னோமே. 41

வல்லாதியின் நாடி முற்றிற்று-ஆகசெய்யுள்-366.

---

## வைத்தியசதநாடி.

—(×)—

### காப்பு.

அருவுருவாய்ரூபமுமாயடங்காதபொருளாகியடங்கலாகி, அருவுருவாய் புறமாகியண்டபகிரண்டமுமாயுள்ளுமாகி, ஒருவுருவாயுயிர்க்குயிராயுயிரில்நிறைந்தி யங்கிற்குமொப்பிலானே, கருவுருலாப்வைத்தியத்தின்சதகமிதைவமூத்தவும் காப்புத்தானே. 1

காப்பான்சிவமுடனேசத்திகூடி கருவானவாய்விளங்கித் தனை யெழுப்பி, தாப்பான்அனல்கூடிவிளைந்துபொங்கிச் சம்போகவேளை யிலேசாடும்விந்து, நேர்ப்பான அறுகுநுனி பனிபோல் விழ்ந்து நிறைந்தோங்கியுதானனங்கேகாவலாகி, கோப்பான தேசமாதவளாயில்நின்று குவலத்தில்வீழ்ந்தாப்போல்விழுந்தானே. 2

தானனவாயுவினாற்பிறந்துளானந் தனைமறந்துநாமங்கள் தனக்கிடாச; தானனவாதபித்தஞ் சேத்துமமூன்றாய் தத்துவங்கள்தொண்ணூற்றாறுகவண்டாம், தானாக விபாநாலாயிரத்துச் சார்வாநாணூற்றுநாற்பத்தெட்டு, தேனாகவளர்ந்தங்கேகருவிலுற்றுச் செகித்தமுதல்மரிக்கும்வரை தழைக்கும்பாரே. 3

பஞ்சபூதமறிய.

பாரப்பாபூதமஞ்சுமண்ணின்றேவு பரிவாயுவாகாசமஞ்சினாலே சேரப்பாசடாமாச்சுமண்ணின்கூறு செறிமயிர்தோலெலும்பிறைச்சிநரம்புபஞ்சாகும், நேரப்பா அப்புவின்கூறுதிரமச்சைநீர்மூளைசுக்கிலமோடஞ்சதாகும், காரப்பாதீக்கூறுபயமாங்காரங் கடுஞ்சோம்புநித்திரைமைதுனங்களஞ்சே, 4

அஞ்சான வாயுவின்கூறிருத்தலோட லவைநடத்தல்கிடத்தலுடனிருத்தலஞ்சாங், பஞ்சாருமரகாரக்கூறுகாமமாதிற் குடிரோதலோபமோகமதமஞ்சாகும், பிஞ்சாரும்விழிமானேவிவைகளெல்லாம் பிறக்கருவியிருபத்தஞ்செனவகுத்து, துஞ்சாததத்துவங்கள் தொண்ணூற்றாறும் சொல்வதுகேள்பொறியஞ்சுதானுண்டாச்சே, 5

இந்திரியவகை.

உண்டானபொறியதுவேதோத்திரந்தொக்கு உறுதியுள்ள சட்சுசிங்குவையக்கிருணம், கண்டாயேசெவியுடம்புகயனம்நாக்குகந்த முறுமுக்குமிவைதானஞ்சாகும், விண்டாயேபுலனைந்துவின்னங்கேளு விரிந்தசத்தபரிசமுடன்ரூபரசக்கெந்தம், திண்டாடுஞ்சத்தமது செவியிற்கேட்குந்தேகமதுசுகமறியும்பரிசமாமே. 6

பரிசமுள்ளரூபமெல்லாம்விழியிற்காட்டும் பண்பான சாரமது வினிப்பைக்காட்டும், பிரிசமுள்ளகெந்தம்நாசியிற்காட்டும்பேசினுயிர்க்கூறுகன்மவிந்த்ரியந்தான், வரிசையுடனஞ்சாகுமவர்க்குப்பாதம் வளர்பாணியுருவோடுபல்தமஞ்சாம், விரிவதீற்குவாக்குவாய்பாதங்காலம் வியன்பாதக்கரலம்வணிகையாம்பாயுருக்கண்ணுமே. 7

கண்ணுன்வுபஸ்தமென்பதுவேலிங்கங் கருதுமிவையஞ்சாகும் ஞானேந்திரியம், தண்ணுனவஞ்சாகுமண்ணமுடன் கெமலங்கரஞ்

மொடுவிசற்சமானந்தமஞ்சு, குண்ணுனவசனமது வார்த்தைவாய்க் கு டீயிர்க்கூறுகெமனமகனகாலிற்றுலும், திண்ணுன்தானமெனுற் கொடுக்கவாங்கச் செய்யுமிருகைக்குமுயிர்க்கூறலமே. 8

கூறுனவிகற்பமது அபானன்வாய்விற் கொழுகிமலம் விடுத்தலு யிர்க்கூறுமென்று, வீறுன ஆனந்தலிங்கந்தன்னில் மேவிநீர்தந்துவிடு ங்கூறுமென்றும், பேறுனகரணமிதிநான்கேகேளீர் பெரியமனம்புத் தியாங்காரஞ்சித்தம், வாறுனமனநினைக்கும் புத்தி பிசாரிக்குமாங்கா ரங்கொண்டெழுப்புஞ்சித்தமொன்றுவிக்கும். 9

ஒன்றுன அறிவொன்று அதனிற்கூடி யுள்ளமதைக் கண்டுமயிழ் ந்திருக்குமென்று, நன்றுனதத்துவத்திற்பூலைஞ்சு நல்லபொறிபஞ் சு புலனஞ்சினேடு, கண்டாயேஞானமிந்திரியமஞ்சு கன்மலிந்த்ரிய மஞ்சகரணம்நான்கு, வொன்றுனவறிவோடேழுப்பதாச்சு உத்தம னேதேசவாய்வுபத்துங்கேளே. 10

வாய்வுவிபரம்.

பத்தானவாய்வுதான்பிராணனேடு அபானன்பதிவானவியான னுதானன்சமானன், சித்தானகூர்மனுடன்நாகன்கிரிநாணுந்தேவதத் தன்தனஞ்செயன்பத்தாகும், வித்தானபிராணன் மூலத் தைச்சேர்ந்துமேல்நோக்கிச்சிரசில்முட்டிவிழியின்கீழாய் தெத்தாக நாசிவழியொடுமீராறில் திரும்பியெட்டுமூளப்புகுந்துவிண்போம்

கூறுகின்ற வாதசிலேட்டுமமுங்கூடில் சோழியட்டையெனநட க்கும்அசிரணநாடி, தூறுகின்றமந்திரியதயத்திநாடி தூங்குகின்றகா கநடையென்றுசொல்வா, தேறுகின்றஸ்ரீசங்கைஇப்படியாம்நின்று தீபரமாய்நடக்குர்பலபந்தநாடி, ஊறுமுன்னைப்போல்நடக்கும்சன்னி வாதம் உயர்நாடிவிதிகளையும் உரைக்கக்கேளே 12

உரைத்தவிரகின்கட்டுக்குள் முஞ்சூறுஉலவுதல்போலே நடக் கும்குடுலைவாயு விரைந்தெழுந்தேமந்தமாயிருந்தப்பினும் விதகாக நடக்குமதுசூட்சாமவாயு, புரைத்தருமையில்வகைபின்சன்னிவாதம் பொருப்பாகத்தவிந்தழுலைப்போலுங்கொங்கை, முரைத்தெழுந்தச ங்கினிநாந்தாரிப்பின்னேமுறைமைதாம்நாடி யெனமுனிவர்தாமே

முனிகின்ற தேகபரிசத்தைபார்க்கில் முன்வாதத்தேசிக்குச்சரீ ரஞ்சற்றே அனகின்னஉட்சணமாம்பைத்தியதேகிக்கதிகமுண்டாம் அப்பால்சிதளமாய்சிற்கும், சுனகின்றசிலேட்டுமந்தான் சூழ்தேகிக் குசிதாந்தகுணம்நால்விதமாம்நிறந்தான்கூறில், பனிவாதமேதகநிறங் கறுத்துநிற்கும்பைத்தியதேகநிறமஞ்சள்சிவப்புதாமே 14

நிற்பானே தேவதத்தன்சத்தத்தோடே நின்றுகூரலோசைசெய்து பிலன்கள்செய்வன், மெய்ப்பானதனஞ்செயனுந்தேகமாண்டு மூன்று நாள்சிரம்வெடிக்கிலோடிப்போவ, னிப்பாற்கேள்நாடிபத்திடையினோடு பின்கலையுமிதமானசுழிமுனையுஞ்சிங்குவையும்புருடன், தப்பாதகாந்தாரி அத்தியலம்புடையுஞ்சங்கினியூடேகுவ னிவைபத்தா. (க௫)

ஆங்காணுமிடவலக்கால்விரலில்நின்று அசைந்திளகியிடநாசியிளவுபற்றி, பாங்கானபின்கலைதானிடதுகாலில்பருவிரலில் நின்றிளகி வலநாசிபற்றி, தீங்கானசுழிமுனையும்பிராணவாய்வைச் சேர்ந்துசிரசளவுமுட்டித்திடன்செய்வான்கேள், ஓங்காணுஞ்சிங்குவையுள்நாக்கில் நின்று வுண்டவன்னஞ்சாரமுறவிழுங்குந்தானே. (கசு)

தானமுள்ளபருடனுமோவலதுகண்ணில் தானிருப்பன்காந்தாரியிடதுகண்ணில், யீனமறவத்திவலக்காதிருப்பனிடக் காதிற்குருவன்றானிருப்பன்கண்டாய், கானஅலம்புடைகண்டத்தில்நின்று நாவிற்கசிந்துநீர்பொசிய்வுபாயங்கள்செய்வன், ஊனமற்றசங்குனிகுய்யம்பற்றியொருவரையுமிஞ்சவொட்டாதிருப்பன்றானே. (கஎ)

ஆயசவகை.

தானான மலாசயமுஞ்சயாசலமும் மாயசமிருந்தசுக்கில மூத்திரமோடைந்தும், பானான அமாசயமனனந்தன்னிற் பருகுமிடந்தன்னில் நிற்பன்சலாசயந்தான், மானான அன்னமொடுதண்ணீர்தானேவகுத்திறங்குமிடத்தில்நிற்பன்மலாசயந்தான், தானுளமலஞ்சேரு மிடத்தில் நிற்பான் சலஞ்சேருமிடஞ்சலாஞ்சயனிற்பானே. (கஅ)

கோசவகை.

நிற்பானேசுக்கிலவாசயந்தான்விந்துநிறைந்திருக்குமிடத்தில்நிற்பன்கோசமைந்து, தப்பாதஅன்னமயம்பிராணமயமென்றுஞ்சார்வாவிஞ்ஞானமனோமயந்தானென்று, நற்பான ஆனந்தமயமோடைந்துநாடுமன்னமயந்தனிலே பிராணமயந்தோன்றும், ஒப்பானபிராணத்தில்மனோமயந்தான்தோன்று மூண்டானமனோமயத்தில் விஞ்ஞானமயமாமே. (ககூ)

ஆதாரவகை.

மயமானவிஞ்ஞானமயமானந்தமயன்தோன்றுந் தத்துவங்கள் முப்பதாச்சு, செயமாகமுன்சொன்னமுப்பதோடே சேர்ந்ததப்பா அறுபதையுந்திறமாய்ப்பாரு, நயமானவாதாரமாறுஞ்சொல்வேன்நல்மூலாதாரமொடுசுவாதிட்டானம், தயவான மணிபூரக மனாகதமரம் விசுத்தி சார்வானவாக்கினையோடாறுமாமே. (௨0)

ஆறானமூலமதுகுய்யத்துக்குமறிவானகுதத்துக்கு நடுவேயாச்சு
வீறானசுவாதிட்டானந்தான்கேளுவீணாத்தண்டுற்றவிடந் தானேயாச்
சு, வாறானநாபியெனுங்கமலந்தன்னில் மணிபூரகஞ்செறிந்தவிடமே
யர்ச்சு, கூறான்விருதயகமலந்தானேகொழுத்தவனாகதமெனவேகுறிக்
கலாமே. (உக)

மண்டலமுறை.

குறிப்பானவிசுத்திகண்டத்தானமாகுங்கூண்டதொரு புருவமை
யமாக்கினையாகும், பிறிப்பானவாதமாறுஞ்சொன்னேம்பேறான மண்
டலந்தான்மூன்றுங்கேளாய், பொறுப்பானவக்கினிமண் டலந்தானொ
ன்று பொருளானவாதித்தமண்டலந்தானென்று, குறிப்பானசந்திர
மண்டலத்திநேடேமூன்றுச்சு அக்கினியமூலத்தாச்சே. (உஉ)

மும்மலம்.

மூலமதிலக்கினிமண்டலந்தான்சேர்ந்து முனிந்திளகிநாபிமட்டு
மூயர்ச்சிசெய்வான், நீலமுறுமாதித்தமண்டலந்தானெஞ்சிற் சேர்ந்து
கண்டத்தானமட்டுந்திறமேசெய்வான், கோலமுறுஞ்சந்திரமண்டலந்
தானெற்றிக் குறிப்பறிவைமலமூன்றுங்கூறக்கேளு, சாலவேயணு
வாகமியமுமாய்கை தயவானவாணுவத்தின் தகைமைகேளே. (உங)

முத்தோஷம்.

ஆணுவந்தானுடப்பைநானென்றிருக்கை காமியங் கண்டதெல்
லாமாசைகொள்ளல், நீணில்த்தில்மாய்கையதுதனக்குவாற நிலைதா
னேயறியாமற்கோபங்கொள்ளல், பூணுவதுதோஷமூன் றதனைக்கே
ளு புகழ்வாதபித்தசிலேற்பனமேமூன்றில், பேணுகின்றவாதமதுவா
யுவின்கோபம் பித்தமதுஅக்கினியின்கோபந்தானே. (உச)

ஏஷணாத்திரயம்.

கோபமுள்ளசிலேற்பனந்தான் அப்பின்கோபம் குணமூன்று
கோபமதாற்கொழுநோயெல்லாந், தாபமுறும்ஏடணைமூன்றதனைக்கே
ளாய் தாரஏடணைபுத்திரஏடணைதானென்று, சோபவுடகேடணைமூன்ற
தனைக்கேளு சொலுந்தாரஏடணைபெண்ணாசையாதல், சாபமுறும்புத்
திரஏடணைதான்புத்திரர் தனைத்தேடி யாசைகொள்ளல் தயவுதானே,

கொண்டவுடன்கேடணைதா னுறவுகொள்ளில் கொள்வதற்குவா
சைகொள்ளல்குணமூன்றேகேள், தண்டமிழோரறியும் ராசதாமதமு
ஞ் சாத்மீகமூன்றினுடதகைமைகேளாய், கண்டபடிராசதமாங்காரமா
வக்காசினியிலமிர்தகுண மாயிருப்பன், உண்டிபெருத்திடுஞ்சோம்பு
தாமதந்தான் உன்மத்தமதவெறியாயிருப்பன்தானே, (உரு)

அஷ்டவிதராகம்.

தானமுள்ள்சாத்மீகங்குளுந்தசொல்லாய்ச் சகலருக்கும் அமுர்த குணமாயிருக்கை, ஏனமுள்ளராகமட்டுஞ்சொல்லக்கேளாய் யியல்காம ங்குரோதமுடன்லோபமோகம், ஆனமதமாச்சரிய மிடும்பைவெட்க மாகமெட்டிற்காமமதுவாசையாச்சு, ஈனமுறுங் குரோதமதுபிணக்கு லோப மியல்பானபிடிபாடுதானுமாச்சே. (உஎ)

இருவினை.

ஆமிந்தமோகமதுபிரியமாச்சு அடுத்தமதமால்துவே கிருபையா ச்சு, ஓமிந்தவாச்சரியம்வாரமாச்சு வுறுமிடும்பைதானுமுதாசினமேயா ச்சு, வேமந்தவேகமதுகொரேமாச்சு வேறுஇரு வினையிரண்டும்விள ளக்கேளு, தாமந்தநல்வினைதீவினைதாவ்ரெண்டு தயவானபுண்ணியம் நல்வினைதானச்சே. (உஅ)

பஞ்சாவஸ்தை.

புண்ணியமல்லதீவினையேபாவம் புனிதமுறுமவஸ்தைபஞ்சுசொ ல்லக்கேளாய், திண்ணமுறுஞ்சாக்கிரஞ்சொற்பனஞ்சுழுத்தி சேர்ந்த துரியந்துரியாதீதமஞ்சில், வுண்ணமுறுஞ்சாக்கிரமெல்லா மகதானம் பெரியசொற்பனமேகண்டத்தானம், எண்ணமுறுஞ் சுழுத்தியிருதய மாந்தான மிதமானதுரியமதுநாபிகாணேன். (உகூ)

காணப்பாமூலமதில்துரியாதீதங் கலந்துநிற்குமஞ்சோடேமுப்ப த்தாறு, தோணப்பாமுன்மொழிந்தஅறுபதோடே சொன்னேமேதத் துவங்கள்தொண்ணூற்றுறுல், ஊணப்பாவுடலாச்சுவுயிருமாச்சு உயிர் போனாற்பிணமாச்சுவுயிர்போமுன்னே, பூணப்பா வாதபித்தசேத் துமத்தாற் பூண்டெடுத்ததேகவளம்புகலுவேனே. (௩0)

தேகவளம்புகல்வதுகேள்தொண்ணூற்றுறு தேர்ந்தவிரல்நீளம வர்கையினாலே, வாகுபெறுமெண்ஜான்குமுறுப்புமாகும் வள்ரோம மூன்றுமனைக்கோடியாகும், தோகையரே சிலேஷயந்தான்குணமு மெவர்ன்பான் தூக்குநிறைதேகமெட்டுத்துலாமேயாகும், ஆகமெல்லா ம்நரம்புஎழுபத்திரண்டு ஆயிரமேசெறியுமெனவறியலாமே. (௩க)

அறிவானநாடியெழுபத்திரண்டு வாயிரமேயொருநரப்புரியின் கேசம், நெறிநேர்மையாயிருக்குமிடங்கடோறும் நீட்டிமுடக்கியா க்கைபோலேகட்டும், பிறிவாகமுடிச்சிடத்தில்திரண்டுகூடிப் பின்னல் கொண்டுபறக்தோங்கித்தேகமெல்லாம், செறிவாக விருக்குமருமெலா ருநரம்பில் திரிதோஷஞ்சேருவது தெளிந்துசொல்லே. (௩உ)

## முத்தோஷநாடிவிவரம்.

சொல்லுகின்ற வாதபித்தஞ்சிலேட்டுமெந்தன்னில் சுகமானபித்த மதுபூதநாடி, வெல்லுகின்றகுருநாடியாத்மநாடி வெகுநோயையகற்றி நலங்காட்டுநாடி, பல்லுயிர்க்குந்தானுகியிருந்தநாடி பலகோடியண்டமெல்லாம்நிறைந்தநாடி, அல்லலறுமகங்காரம்பிராணநாடி அக்கினியைச்சேர்ந்தெழுந்தநாடிதானே. (கூங)

நாடியென்றால்நாடியல்லநரம்பில்தானே நலமாகத் துடிக்கின்ற துடிதானல்ல, நாடியென்றால்வாதபித்தசிலேற்பனமுமல்ல நாடிஎழுபத்திராயிரந்தானல்ல, நாடியென்றாலண்டபகிரண்டமெல்லாம்நாடியெழுவகைதோற்றத்துள்ளாய்நின்ற, நாடியதுஆராய்ந்துபார்த்தாரானல் நாடியதும்பொருள்தெரிந்துநாடுவாரே. (கூச)

தெளிந்திட்டநாடியதுஞானம்போலே சிறப்பானபுரிமூன்றும் ஒன்றாய்க்கூடி, மொழிந்திட்டவாதபித்தசிலேற்பனமென்று முன்கையில்பூண்டிருக்குமுறைமையாக, தெளிந்திட்டவாதம்அபானத்தைப்பற்றி நிறைந்திடைபைச்சேர்ந்துந்திகீழேநின்று, குளிந்திட்டமூலமதுயெழுந்துகாமக் கொடையிடையைபற்றியெழுங்குணத்தைபாரே. ()

குணமானவெலும்பைமேற்றெக்கைநாடி குழாமாகும் எழுபத்திராயிரத்தைச்சேர்ந்து, நிணமானபொருந்திடமும் ரோமக்காலும் நிறைவாங்கிமாங்கிஷமெல்லாம்பறந்து, மணமானவிந்துவிழ மலநீர்ப்பெய்ய வழிகாட்டித்தேகமெல்லாமூளைவுகாட்டி, கணமானசெதவாய்வுக்கிதமுங்காட்டி கால்காட்டிவாதமெங்குங் கலங்குந்தானே. (கூசு)

தானுன பித்தம்பின்கலையைப்பற்றித் தயவானபிராணவாய்வதனைச்சேர்த்து, ஊனுனநீர்ப்பையில் அணுகிமூலத் துநித்தெழுந்தவக்கினியைஉறவுசெய்து, மானேகேளிருதயத்திலிருப்புமாகி யனலாகி நினைவாகிமயக்கமாகி, கோனுனசிரந்தனிலேஇரக்கமாகிக் கொண்டு நின்றபித்தநிலைகூறினேமே. (கூஎ)

கூறினேஞ்சிலேஷ்பனமதுசமானவாய்வைகொழுகிறேசுழிமுனையைபற்றிவிந்தில், சீறியேசிரசிலக்கினியைசேர்ந்து சிங்குவையுண்ணுக்குநிணமச்சைரெத்தம், மீறியேநிறங்கோணம்நரம்பெலும்பில்மேவியதோர்மூளைபெருங்குடலிற்கண்ணில், தேரியதோர் பொருந்திடங்களெல்லாஞ்சேர்ந்து சிலேஷ்பமதுவீற்றிருக்குந்திடங்கண்டாயே. ()

வாதத்திலெடுத்ததேகம்.

கண்டாயோவாதத்தால்எழுந்ததேகச் சட்டிமையாய்த்தடித்திருக்குங்கருமைசெம்மை, வண்டாருங்குழலாள்மேலற்பவாசை செய்வு மிகும்போகமுறுமனஞ்சிக்கென்றல், இண்டாலேவற்பவுண்டி எரிப்போடுண்ணுமுறுகாறுகுறைச்சலுடங்கிளைவுசீதம், பண்டோர்கள்நூல் முறையை நடக்கல்போதம்பாங்கான அறிவிசைத்தால் திண்ணந்தானே. (௩௯)

வாதசிலேத்துமக் குறி.

திண்ணமுறுவாதத்தில்சேத்மஞ்சேர்ந்ததேசகுண மதகரிபோல் நடக்குங்காயம், வண்ணமுகத்தூலமதாமுயர்ந்தமேனிவார்த்தை யிடிபோலாகும்போகமுண்டாம், நிண்ணயமாங்கலைக்கியான மறிவுமுண்டாம் நேரிழைமேல்மிகவாசைநிறமேசெம்மை, உண்ணுவதுபுளிப்பெரிப்பு அதிகம்வேண்டு முயர்ந்ததொருகாரசாரஞ்செய்வான்றுன். ()

பித்தவாதடேதகக்குறி.

தானமுறப்பித்தத்தில்வாதஞ்சேர்ந்தால் சரீரகுறி மெலிவுநிறங்கறுப்பேயாகும், ஈனமுறப்பொய்யுடனே மெய்யுஞ்சொல்லும் எரிப்புடனேவாப்பதிகமுண்ணவேண்டும், கயனமருங் குழலார்மேல் மிகுந்தவாசை கடிந்தமொழிமுக்கோபங்காட்டுமுள்ளம், ஆனவுடல்நெடிதல்துகுறிதலாகும் அறிவுகுறைந்திருக்குமென வறியலாமே. (௪௧)

பித்ததேகக்குறி.

அறிவானபித்தத்தாலெடுத்ததேக மறமெலிவுநிறம்வெள்ளையரிவையோடு, பிரியாதசுகலீலை அற்பவுண்டிபெரும்புளிப்புணவுகொள்ளப் பெரியோர்தம்மைக், குறியாகவாசாரம்பண்ணல்புத்தி குழம்பிப்பின்தேறல்கலைக்கியானபோதம், நெறியாகக்கற்றறிவுசொல்லல்வீரம் நிலைப்புமதியிளக்கமதியுறவுமாமே. (௪௨)

பித்தவாதத் தேகக்குறி.

உறவானபித்தத்தில்வாதஞ்சேர்ந்து யுகந்தெழுந்ததேகமதுபொதுநிறமேயாகும், நிறைவானகுணங்கிருபைபகரட்சைவாம நேர்மைசுகியன்குளிசையோகமாய்கை, மதவானகனவுநற் கெர்தம்வேண்டும் வாய்ஞானமதிகபுத்திகுயில்போல்வார்த்தை, துறவானவுடல்வறட்சைபசிபெருமையாகுஞ்சூடெரிப்புபுளிப்பதிக முண்ணுஞ்சொல்லே. ()

பித்தசேத்தும்தேகம்.

சொல்லுகின்றபித்தமதிற்சேத்மஞ்சேர்ந்த சொரூபமதுசெண்பகப்பூநிறமேமேனி, வல்லியர்மேல்மிகவாசை புளிப்பினிப்புண்ணும்

வாக்குநயக் குரலோசைமனத்திடமேயாகும், நல்லறிவுகற்க்கமுதி யோரைப்பேணும் நடுநிலையேசொல்லுமதியோகமுண்டாம், பல்லுயி ர்க்குத்தாளிரங்கிக் கிருபைசெய்யும்பாங்கானதாமமிகுந் திருக்குந்தா.

### சிலேற்பனதேகக்குறி.

தானான சிலேற்பனத்தாலெழுந்ததேகந் தணிந்திருக்குமனம்வி லக்குஞ்சரீரம்வேர்க்கும், மானுர்மேல்மயலாகுஞ்சிவந்தமேனி வாளி டிபோற்குரலாகும்வணக்கமாகும், ஆனாலோபொய்யதை மெய்யாயு ரைக்குமாப்பாசிக்குந் தித்திப்போடுண்ணுங்கால, ஊனனக்கசிந்திரு க்குங்காசங்கக்கல் உண்டாகுமென்றுமுன்னோருரைத்தவாறே. (சரு)

### சேத்துமபித்ததேகக்குறி.

வாறானசிலேற்பனத்தில்பித்தஞ்சேர்ந்தால் வளர்கோரோசினை நிற மாமேனிதானும், வீரானபுளிப்பினிப்புமெத்தவேண்டுமெய்ரோமம் சிவப்புவெடிக்குரலேயாகும், பேருனசத்தியமொழி பொய்சொல்லா மைபிறபலனும்யோகமுண்டாம்பேதையோடு, கூறுகமையல்வினைபண் புகழ்ச்சிவீரம்கொண்டுமனத்திடத்தனெனக் குறிக்கலாமே. (சக)

### சேத்துமவாததேகக்குறி.

குறிக்கின்ற சிலேற்பனத்தில்வாதம்பற்றில் கூண்டெழுந்ததேக மதுதூலகாயம், பிரிக்கின்றவுடல்கருமைசெம்மையாகும் பெருதகுட வுண்டிபுளிப்பெரிப்போடுண்ணும், மறிக்கின்றபெண்ணாசைவீரம்யோ கம்வாழ்க்கைவிதானவித்தைமறைநூலாய்தல், நெறிகொண்டபெரி யோரைபோற்றவன்பு நேசமுறுஞ்சிலேற்பனத்தில் வாதமாமே. ()

### வாதநாடி.

வாதமெனும்நாடியதுதோன்றிற்சீதமந்தமொடு வயிர்பொருமல் திரட்சைவாய்வு, சீதமுறுங்கிருணிமகோதரம் நீராமைதிகழ்வாய்வு சூலைவலிகடுப்புத்தினை, நீதமுறுங்கிறுமிகுண மண்டவாதம் நிலையும் நீர்க்கிரிச்சினங்கள்தந்துமேகம், பேதகமாமுதரபிணி மூலரோகம் பேசவெகுபிணிகளுமேபொருளதாமே. (சஅ)

பொருளானவாதத்தில் பித்தஞ்சேர்ந்து பெருந்துகுணக்கிரக முஷ்ணவாய்வுசத்தி, செரியாமைபுளித்தேப்பம்பொருமைநீரிற் சிவப் புமலம்பிடித்தல்முருத்தாதுநட்டம், கருவானதேகமதினுளைச்சல்சோ ம்பல் கைகால்கள்தறிப்புநாக்கசக்குமுன்னம், பரிவானலுண்குறை தல் ருசிகேடாதல்பலநோயும்வருத்திவைக்கும்பாங்குதானே. (சகூ)

பாங்கான்வாதத்திற்சிலேத்மநாடி பரிசித்தால்திமிர்மேவு மூலைச்
சலாகும், தீங்கான இருமலுடன்சன்னிதோஷம்சேர்ந்தவிஷம் வெடி
சூலையிருத்துரோகம், வாங்காதசளைமந்தாரகாசம் வலியுடனே பிற
வீக்கன்வீச்சுவீக்கம், ஆங்காலுஞ்சுக்முடனேசுவாசகாசம் உண்டா
கும்வெகுநோய்க்குமுறுதிதானே. (௫௦)

## பித்தநாடி.

உறுதியுள்ள பித்தமதுதோன்றில்வெப்பு உஷ்ணவாய்வத்திசுர
மதிசரங்கள், மத்தியுடன்கிரக்கமர்ம்பத்தியரோகம் வளர்சோகையழ
லெரிவுகாந்தல்கைப்பு, இருதயத்திற்கலக்கமது மரப்புதாகம்யெழுங்
கனவுபேயணையுமயக்கமூர்ச்சை, சிறிதுபெரும்பாடுரத்தம்பிறமேகங்
கள்சேர்ந்து வெகுபிணிபலவுஞ்சிறக்குந்தானே, (௫௧)

சிறப்பானபித்தத்தில்வாதநாடி சேரிலுறுதாதுநட்ட முதிரப்பி
ணட், உறைப்பாகச்செரியாமைகுன்மஞ்சூலை உத்தசுரங்கிருணிவயிற்றி
ரைச்சல்மந்தம், அறைப்பானஓங்காரபிறநீர்க்கோவை ஆயாசங்கிரக்க
மொடுமயக்கமூர்ச்சை, முறைக்காய்வுவிஷவீக்கமூலவாய்வு முரடான
நோய்பலவுமுடுகும்பண்பே, (௫௨)

* பண்பானபித்தத்தில்சிலேத்மங்கூடிப் பரிசித்தால்அத்திசுர மிளை
ப்புயிளை, கண்காதுநயனமலம்நீருமஞ்சள் கனவயிறுபொருமல் மஞ்
சள்நோய்கண்ணோவு, உண்போதுகறுத்தல்ரத்தவிடபிருதி தானுமுள
மாந்தைபீனிசமும்ரத்தவீக்கம்,நண்பானகாமாலைசோதுகவெப்புநணு
கிவந்தபலபிணியுங்காணுந்தானே. (௫௩)

## சேத்துமநாடி.

தானமுள்ளசேத்துமந்தானிளகிவெப்பு க்ஷயமிளை இருமல் மந்
தாரகாசம், ஈனமுறுஞ்சன்னிவிஷதோஷம்விக்கல் இருத்துரோகங்
கரப்பான்விரணதோஷம், மானனைவீர்சூலைதிரள்வியாதிவீக்கம் வரு
ஞ்சத்திசுவாசம்நெஞ்சடைப்புத்தூக்கம், ஏனமுறுங்காமாலை பாண்டு
சோகை எழுசுரங்கள்பலதுக்கம்விடமுண்டாமே. (௫௪)

இடமானசெந்தூரத்தில்பித்தநாடி எழுந்தணுகில் விஷமுடனே
வீக்கமுண்டாம், திடமானகுளிர்காய்ச்சல்மஞ்சள்நோவுந் தேகத்தி
லுளைச்சலிளை இருமல்வாந்தி,விடமானநெஞ்சடைப்புசுவாசம்விக்கல்
வெகுசுரமும்நாவறட்சைபாண்டுரோகம், அடமானகுவளைரத்தம் அதி
சாரந்தான் அணுகிவெகுமலநோய்க்குத்தடக்கண்டாயே. (௫௫)

கண்டாயேசிலேற்பனத்தில்வாதநாடி கலந்திடுதல் வயிர்பொருமல்கனத்தவீக்கம், உண்டாலோஓங்காரசத்திவிக்கல், உறுதிரட்சைவாய்வுவலிசன்னிதோஷம், விண்டாலேஇளைப் பிருமல்சோகைபாண்டு விஷபாகம்விஷசூலைபக்கவாதம், திண்பாடுநாசிகாபீடங்கக்கல் சிரநோய்கள்பலவும்வந்துசிறக்குந்தானே. (ருசு)

சிறப்பானவாதத்தில்உஷ்ணந்தானேசேர்ந்திடுகில் அதிசாரமழைச்சல்வாய்வு, கறைப்பானபொருமலொடுவக்கினிமந்தம்உண்டாகும்நீர்ச்சிறுப்புப்பிரமேகங்கள், பிறப்பாடுமேதகரிநீர்கரப்பன்ரத்தம் பிரமேகம்பெரும்பாடுபிறநீர்க்கோவை, அறப்பான வாய்சூலை சேத்மகோபமானபலபிணியும்வந்தடருந்தானே. (ருஎ)

அடங்குகின்றவாதத்தில்வாய்வுவந்து அணுகினல்வலுவிச்சுத்திமிர்வியாதி, சுடருகின்றவானந்தவாய்வுபக்கச்சூலைதுடைகுறுக்குவிலாபிடரிநெஞ்சு, படருகின்றநரம்பிசுப்புஇடங்கடோறும் பரந்துகுத்திக்கொளுவித்துநெஞ்சடைப்புமாகும், இடருறவேசீதமுண்டாம் கபம்பெந்திக்கும் இதனாலேபலபிணிவந்திருக்கும்பாரே. (ருஅ)

இருக்குமந்தவாதத்தில்சீதஞ்சேர்ந்தால் இளைப்பிருமல் விஷசன்னிதோஷம்விச்சு, வருக்கின்றகுளிர்காய்ச்சல் விரணதோஷம் வாந்திபெருத்திடுமூளைவுமயக்கஞ்சோர்வு, ஒருக்கின்றமலப்பெந்தம்பொருமல்வீக்கம் உள்வீக்கச்சூலையொடுபாண்டுரோகம், தருகின்றதனூர்வாதம்புக்கவாதம்சார்ந்துபலபிணிபலவுந்தழைக்கும்பாரே. (ருகூ)

தழைப்பானபித்தத்தி லுஷ்ணங்கொண்டால் க்ஷயம்அத்திசுரம்வெறுப்புச்சத்திகுன்மம், கழைப்பானபொறுத்துளைவு அதிசாரங்கள்கடுப்புடனே வயிற்றுவலிமூலவாய்வு, இளைப்பாகி யூன்மறுத்தல்நாக்கசப்பு இரவில்கனவுடனேசங்காரதோஷம், வழைப்பானபயித்தியநோயெரிவுதாகம் வந்தணுகில்பலபிணிக்கும்வகையதாமே. (சுo)

வகையானபித்தத்தில்வாய்வுகூடி வசமானல்வலிகுன்மஞ் சூலைவாய்வு, பகையானவாந்திவிக்கல்அருவருப்புப்பயித்தியங்கள் செறியாமைபுளித்தஏப்பம், தகையாதஊரல்வலிநெஞ்சிநோவுந் தலைகிறுக்கும்சதியாந்தாதுநட்டம், துகைமூலவாய்வுற்று லுஷ்ணஞ்சோகைதுடர்ந்துவரும்பலபிணிக்குந்தொனிப்புதானே. (சுக)

தொனிப்பானபித்தத்தில்சீதங்கூடித் தொந்தித்தால்பசிமந்தமிகாச்சல்வாய்வு, இனிப்பானகபம்வாய்வாதகோபம் எழுமூலக்கடுப்புடனே இருமல்சுத்தி, பனிப்பான குளிர்காச்சல்விஷயாருடம்பாங்குடனேகாமாலைசோகைவீக்கம், கனிப்பானநாக்குவழு வழுப்புத்தோஷங் கலந்துவரும்பிணிபலவுங்கதிக்குந்தானே. (சுஉ)

க்திப்பான சேத்துமத்தி லூஷ்ணங்கூடில் கலந்தகுணஞ்சயமிரு
மல் சுவாசகர்சம், மதிப்பான குவளைரத்தம் விப்புருதியுடனேவளர்
ந்தநாசிகாபீட மிருத்துரோகாம், கொதிப்பானசிங்குவையாக் கிரண
வாய்வு கொட்டாவி விக்கல்மந்தாரகாசம, துதிப்பான வீரலத்திக் கா
ய்வுரத்தந் தோன்றும் வெகுபிணி பலங்கொந்திப்பாமே. ௬௩

ர்தாந்தத்தில் சிலேற்பனத்தில்வாய்வுகூடித் துடர்ந்துகுன்மநெ
ஞ்சடைப்பு சுவாசகாசம், வந்தித்த குரல்தனிலே யுறுத்தவிளை வழு
வழுப்பு நீருறல்மலத்தில்சீதம், வெந்தித்தல் கொழுத்தல் குத்துந்
திமிர்வியாதி வீச்சுடனே வலிவெட்டுந், திரட்சைபாண்டு, அந்தித்த
குறுகுறுப்பு மயக்கம்விக்கல் ஆனபலபிணியு வந் தடருந்தானே. ()

அடைவான சேத்துமத்தில் சிதம்பற்றி யணுகினால்சுவாசமடை
ப்பிளைப்புமூர்ச்சை திடமானவாயாசமயக்கம்வோவை சேர்ந்தவிக்கல்
சன்னிவிஷதோஷம்வீச்சு இடமானவயிர்பொருமல் குளிர்நடுக்கல்
இளைத்தசுரமோங்காரம் பெருத்தவீக்கஞ், தடவான அல்குறிவநதணு
குமென்று சாந்தபெரியோருரைத்ததய்வுதானே. ௬௫

தயவானதிரிதோஷ மூன்றுங்கூடித் தானெழுந்தாற் சன்னியவ
குணமேயாகும்,பயமாகமூவருமேபதுங்கினாலும் பனிமடாச்சன்னிப்
துபதனம்பாரு, மயமானசேத்துமந்தில் பித்தமானல்வாதத்தில்சேத்
துமம்வனுக்கொண்டாகும் நயமாணபிணிதிர வெகுநாடிவகுப்புணர்ந்து
குறியறியலாமே. ௬௬

அறிவானவாதத்தில் பித்தமானல் அடர்ந்தபித்த மதில்வாதம
ணுகினாலும், செறிவானபித்தத்தில் கபமானாலும் செறித்தகபமபித்
தத்திற்சேர்ந்திட்டாலும்; பிறிவாகநோய்திருங் கபத்தில்வாதம் பிர
ண்டாலும் வாதமையம் பிலன்கொணடாலும், குறியாக மருந்துபல
விதஞ்செய்தாலுங் கூண்டவுடல்விட்டுவுயிர் கடக்குந்தானே. ௬௭

கடகமுதல்துலாம்வரையும் வாதமாகுங், கனஆடியைப்பசியு ம
துவேயாகும், விடமீனமுதல்மிதுனம் பித்தமாகும் விரைகம்பங்கு
னிஆனி யதுவேயாகும், திடமாமானவிருச்சிகமுதற்கும்பஞ் சேத்து
மஞ்சேர்ந்த கார்த்திகைமாசி யதுவேயாகும், நடைமேவும்வாதபித்த
சேத்துபந்தானும் நலமாகமாதமுதல் நடக்குங்காணே. ௬௮

காணுகின்றவுதையத்தில் பித்தம்பந்துக் கடும்பகலே சேத்தும
ந்தான் கடிகைபத்து, பூணுகின்றசாய்பொழுது வாதம்பத்து பொழு
தடைந்தால் முதல்சிலேஷ்பனங் கடிகைபத்து, வேணுமந்தநடுச்சாம

ம் பித்தம்பத்து வெய்யவனுதிக்குமுன்னே வாதம்பத்து. ஆனுவ
த்தால் வாதபித்தஞ் சிலேத்துமந்தானு மறிவாகவேதின்மும் நடக்கு
ந்தானே. ௬௯

தானவனு மமைத்தபடி வயதுறு சகலருக்குமிளமையிலே சி
லேஷ்பனமாகும் ஆனநடுவயதுபித்த மப்பால்வாத மாறஞ்சு மூவாண்
டுவாதம்நான்கு, ஈனமறமூவருமே மூன்றுபங்காம் இப்படியே நடந்
துகொள்வா ரிறையோன்முன்னாள், ஏனமுறவமைத்தவண்ண மாண்
டுமாத மிராப்பானாள்கப்பி மரிப்பதாமே. ௭௰

மரிப்பானநூறாண்டு சேத்துமம்பித்த வாதமிவை மூன்றுபங்கா
ய்நடக்கும்போது, தருப்பானஆண்டுபதினொன்று மாதந்தானொன்று
நாள்பத்துஞ்சமர்த்தர்மூவர், இருப்பான சிலேஷ்பனத்திலிரங்கல்வா
தம் இயல்பானபித்தத்தி லிறங்கிலயம், கதிப்பானவாதத்திலிறங்கிப்
பித்தங் கலந்துமுறையாகக்கையாளும்பாங்கே. ௭௧

பாங்காகயிப்படியே நடக்கும்போது பழவினையால் கர்மத்தால்
பலரோய்தன்னால், தீங்கானபூதமைந்திற் பிதாமாதாக்கள் செய்வினை
யால் ருத்திரதோஷத்தாற்பேயா, லாங்கானுகருவிகளா லூறுபாடல்
ஆனபலவிஷத்தாலும நஞ்சினாலும், ஓங்கானுமுயிரழிவாம் விதியே
சேர்ந்து உறுமாதமாண்டுகாட் குறையுந்தானே. ௭௨

நாடிகாணப்படாமை.

குறையாத ஸ்திரீபோக நெடுநோயாளர்க் குதிரைமத கரியேறி
நடந்தோரூர்ந்தோ, நிறைவாகவுண்டெழுந்தோ ரலகரிகொண்டோர்
நீர்ப்பாடுநீரிழிவு சுறைநோவுற்றோர் முறையாகவிக்குமுள்ளோ ரத்தி
க்காய்வால் முசித்தினைந்தோர் பயமுற்றோர்விடமணைந்தோர், அறை
யாமலோட்டமுற்றோர் கிலேசங்கொண்டோர், அறப்பசித்தோர்நாது
வகுப்பறமாட்டாதே. ௭௩

மாட்டாங்கியானபெண்கள்கெற்பத்தோர்க்கு மாதவிடாயானோ
ர்க்கும் பெரும்பாடோர்க்குந் தேட்டாசையதிகவிசாரத்தினோர்க்குந்
தேய்த்தெண்ணை முழுக்குஞ் சினங்கொண்டோர்க்கும் வாட்டாசை
கன்னியர்மேல் பராக்கானோர்க்கும், வயசாகஇளைத்தோர்க்கு மதங்
கொண்டோர்க்கு மோட்டாத்துமாக்களுக்குந்தாதுபார்க்க முறையா
கவருநாடி வகுப்பறாதே. ௭௪

வகுப்பாகக்கைமுறிந்தோர் சோகைகொண்டார், மாண்டபிணந்
தனைத்தொட்டார் வாந்திவிக்கல், தொகுப்பாகவே யெடுத்தோர் விர
த முற்றோர்சோனைமழை தனில் நனைந்தோர் சுரசங்கிதம்,வகுப்பாக

வேபடித்தோர்களரிசுற்றிப் பலநாட்டியங்கள்மிக வாடியெய்த்தோர்
மிகுப்பாக சுவாசமதை யடக்கினோர்க்கும், விலைவானநாடியதுவிலங்
குந்தானே. ௭௫

## அசாத்தியக்குறி.

தர்ணைபிரமேகம் வரதகுலை சார்வானநீரிழிவு குன்மரோகம்
மானுலோசயரோகஞ் சன்னிதோஷம் அடுத்தவிஷங்காமாலை பாண்டு
சோகை, மானேகேள்க்ஷயரோகந்திரள்வியாதி மஞ்சள்நோய் குலைநோ
வுபயித்தியரோகம், ஊனுறும்வருடமித்தில் அதிசாரங்களுண்டாகுஞ்
சாத்தியமாமுறுந்தானே. ௭௬

உறுதிகொண்ட வலுவிச்சு சன்னிதோஷ மூரத்தகா விஷசோ
கை உழளுரோகம், மறுதியுள்ள கிராணியதிசாரங்குன்ம மத்திசுரம்
வயிற்றுளைவு பிரமேகங்கள், பொறுதியுள்ள நீரிழிவு சுவாசகாசம்,
ஈபெருந்துக்ஷயங் களையிளைப்பு மிறுததுரோகம், சுறுதினிடனிந்நோ
யில் விக்கம்வந்து தோன்றுடில் மரணமென்று தொகுத்துச் சொ
ல்லே. ௭௭

தொகுத்திட்டநீரிழிவுமேகசூலை சுரவிக்குச்சன்னிவலி தோஷ
மாந்தம், மிகுத்திட்டகிராணியதிசாரம்வாதம் விஷபாகந்திரள் பாண்
டுசோகைகாமாலை, வகுத்திட்டபெரும்பாடு மஞ்சள்நோவு வாய்வுரத்
த பித்தமுடன்பலநோவுக்கும், பகுத்திட்டஇளைப்புடனே சுவாசவி
க்கல் பற்றினால்மரணமென்று பகுத்துச்சொல்லே. ௭௮

சொல்லுகின்ற விஷபாகம் விக்கஞ்சேர்கைச் சூலைவயிறழல்வா
தநீரிழிவுமேகம், அல்லல்படுபிளைப்பிருமல் சுவாசகாச மதிக்ஷயஞ்
சன்னிவிஷமாந்ததோஷம், வெல்லுகின்றக்ஷயரோகந்திரள்வியாதி விரா
ணகுன்ம மத்திசுரங்காமாலை, வல்லமையாலிந்நோயில் வயிற்றுளைச்ச
ல் வந்தணுகில்மரணமென்று வசனிப்பாயே. ௭௯

வசமானநீரிழிவு பிளவையிலை மந்தாரகாசக்ஷய மிரத்தபித்தம்
நிசமானவளைச்சலதிசாரஞ்சன்னி நீண்டசுரந் தோஷரத்தபிரமேகங்க
ள், விஷமானவிக்கநீர்க்கெற்பசூலை விச்சுவலிபெரும்பாடுமூலவாய்வு
துசமாவவிந்நோயிற்கொழுந்துவாயுந் தோன்றிடுகில்மரணமென்றுது
திக்கலாமே. ௮௰

துதிப்பான மேகத்தில்நீரிழிவுமாகா தோன்றிய நீரிழிவுதன்னி
ல்வாய்வுமாகா, மதிப்பானவாதத்தில் வயிற்றுளைச்சலாகா, வருமலைச்
சல்தனில்வாய்வுக் கொழுத்துமாகா, கொதிப்பானவாய்வதிலே விக்க
லாக கூண்டவிக்கல்தனிலிளைப்புக் கொழுக்கலாகா, கதிப்பானஇளை
ப்பதிலேசுவாசம்வந்து கலிந்தாலுமரணமென்று கருதலாமே. ௮௧

கருதுகின்றமந்தமதில் சுரமுமாகா கலந்தசுரந்தனில்விஷமே காணலாகா, மருவுகின்றவிஷமதிலேவிக்கமாகா வருவிக்கந் தன்னில் பொருமலாகா, பொருமலிலேகபரோகம்புரளலாகாப் பொருந்துகபந்தனில்விளைப்புபூணலாகா, வெருவியதோர்விளைப்பதிலேசுவாசம்விக்கல். மேவிடுகில்மரணமென்று விள்ளலாமே. அஉ

விள்ளுகிறேன்மேகமதில் வாய்வுமாகா விரைவானவாய்வதிலே திரட்சையாகா, கொள்ளுகின்றதிரட்சையதில்விக்கமாகா கூறியதோர்விக்கமதிற்கபமுமாகா, தள்ளுகின்றக்ஷயமதிலேகபமுமாகத் தோன்றுகபந்தனிலிரத்தந் தோன்றலாகா, தள்ளுகின்றரத்தமதிற் சுவாசம்விக்கல் சார்ந்தாலுமரணமென்று சாற்றலாமே. அங

சாற்றுவதுசீரிழிவிற் பிளவையாகா சலமானபிளவையிலே தாகமாக, தேற்றமுள்ளதாகமதிலனலுமாகா வியல்பானவனல்தனிலே மயக்கமாகா, சிற்றமுறுமயக்கமதில் வேர்வையாகா சீர்கேடாம்வேர்வையிலேகபமுமாகா, பூற்றிருவேகபந்தனிலேவிக்கல்வந்து பொருந்திடுகில்மரணமென்றுபுகலலாமே. அச

புகல்வதுகேள்அத்திவயுவாகா பொருந்தியதோர்வாய்வதிலே குன்மமாகா, தகைமைபெறுங்குன்மமதில்பேதியாகா தாங்காதபேதியிலே பொருமலாகா, அகலமுறுப்பொருமலிலே கபமுமாகா ஆங்காரக்கபத்தில்விக்கலணுகலாகா, சுகம்பெறவேவிக்கலிலே மயக்கமவந்து தோன்டிடுகில் மரணம்வந்துதுடருந்தானே அரு

துடரானபித்தமதிற்சோகையாகா சோகையிலேவாய்வெழுந்து தொந்திப்பாகா, இடரானவாய்வதிலேபாண்டுவாகா வெழிற்பாண்டு தனில்வயிற்றுக்கடுப்புமாகா, திடமானகடுப்பதிலேசீதமாகா சீதமதிலெழுந்துகபஞ்சேரலாகா, சடமானகபந்தனிலேமயக்கம்விக்கல் சார்ந்திடுகில்மரணமென்றுதயவாய்ச்சொல்லே அசு

தயவானசுரந்தனிலேவிஷமுமாகா சார்ந்தவிஷந்தனில்தோஷம் தழைக்கலாகா, பயமானதோஷமதிற்சன்னியாகா பாங்கானசன்னியிலேகபமுமாகா, வியல்பானகபந்தனிலே விக்கலாகா விளங்கியதோர் வாய்வதிலேவிளைப்புமாகா, கயமானவிளைப்பதிலே சுவாசம்விக்கல் கலந்தாலுமரணமென்றுகழறலாமே அஎ

கழறியதோர்அத்தியிலேகாய்வுமாகா காய்வதிலேவாய்வெழுந்துகலக்கலாகா, உளறியதோரவதிலேஉளைச்சலாகா உண்டானவுளைச்சலிலேவிக்கமாகா, குளறியதோர்விக்கமதிற்சீதமாகா குளிர்சீதமதனிற்கபங்கொழுக்கலாகா, இளகியதோர்கபந்தனிலேமயக்கம்விக்கம் எழுந்தாலுமரணமென்றிசைக்கலாமே அஅ

இசைந்தபடிசுரந்தனிலே இளைப்புமாகா இளைப்பான கபந்தனி லேவிஷமுமாகா, உசந்தவிஷந்தனில்மயக்கம் வாய்வுமாகா உண்டா ன மயக்கமதில்சுவாசமாகா, அசைந்திளகுஞ் சுவாசமதில்வேர்வையா கா வானகபவேர்வையிலே குளிர்ச்சியாகா வசைந்திளகுங் குளிர்ச்சி யிலே மயக்கம்விக்கல் வந்தாலுமரணமென் றுவழங்கலாமே அசுஉ

வணங்கியதோர்வாதபித்தசிலேஷ்மந்தன்னில் வலுவானபித்த மதுதளர்ச்சியாகும், பிணங்கியதோர்வாதமதிற்சிலேஷ்மஞ்சேர்ந்து த்தன்னல்கொண்டு இளைப்பாகியுடல்வெளுத்து, இணங்கியதோர்கை காலுங்குளிர்நதுநெஞ்சும் எடுத்தடித்துக்கண்மூக்கில்நீரும்பாய்ந்துஉ ணங்கியநாவாண்டுபல்லுங்கறுத்துவாந்தி உண்டாகில்மரணமென உ ரைக்கலாமே கூய

உரையானபித்தமொடு வாதந்தாழ்ந்து உற்றசிலேற்பனமிகவிச் சத்திவிக்கல் விரைவாகவேயெடுத்துநெஞ்சடைத்து மேவிளைப்பாய்க் குருகுறுத்துவேர்வையாகி வரையாகிவிழிசொருகிமூக்கடைத்து வா யாலேசுவாசமுநா வரண்டுதானால், துரையாகவிருந்தாலு மரணம்வந் து சுருக்காகமரிப்பதுவுந்திண்ணந்தானே கூக

திண்ணமுடன்நீரடைத்து மலமுமடைத்துச் சிறந்ததொருநீர்ப்பா ய்ந்துசிதமேவி, வண்ணமுள்ளகைகாலும்பருத்துவீங்கி வயாபொரு மி நாவாண்டுவாந்தியாகி, எண்ணமுறமூச்சடைத்துவிக்கலாகி இளை ப்பதிலேமயக்கமதாய்த்தேகமெல்லாம், தண்ணெனவேகுளிர்ந்திடுகி ல்மரணம்வந்து சாருவதுமுறுதியென்று சமைத்துசொல்லே கூஉ

சமைத்தவன்னந் தனையெடுத்து விக்கலாகி சடமானவயிர்பொ ருது சரீரஞ்சோர்ந்து இமைத்தஉடல் புடைத்தெழுந்து விலாவிரண்டு ம் எடுத்தடித்து உடல்குளிர்ந்துசத்தியாகும், இமைத்தபிடரிவெளு த்துபுறங்கைகால்வீங்கி, மீண்டவிங்கமூச்சுரித்திளைப்புமாகி அமைத் தகுலைவோவையினால், மரணம்வந்து, ஆனவுடலழியுமென வறியச் சொல்லே. கூஙா

அறிவானகண்டமதினோவுமாகி யம்பரமேசிவந்துஅழல் தானே மேவி,குறிவானவண்டமுடன் முகமும்வீங்கிக் குறுக்கவடிவயதுபி றங்கைகால்னத்து, வெறியாகித்தாகமுமாய் மயக்கமாகி விக்கலுடன் மேல்மூச்சாய் வியர்வையாகி, மறியானநயனமது கூசிப்பாக்கில் மர ணம்வருமென்றுதிடன்வகுக்கலாமே. கூச

வகுப்பாரநீமலமு மடைத்துவிதது வயிற்றிலே குறுகுருப்பா பிதமாகி, பகுப்பானபுறங்காலும்கையும்விற்றுப் பரிதாபமிகவாகிப்

பிரவேசித்து, தொகுப்பானமூர்ச்சை யோடசதியாகிச் சொல்லரிம னமருண்டுசோகங்கொண்டு, விருப்பானகையதனால்சேட்டைசெய்யி ல் விரைவாகமரணமென்று விள்ளலாமே. கூரு

விள்ளுமேவன்சிலேற்பனமதுமூலத்தூற்று மேலேகும்மேல்மூச் சாய்ப்பிராணவாய்வை, தள்ளவேசேர்ந்துநெஞ்சடைப்புமாகி தொ ண்டையிலேஅலைதிரைபோலிரைத்துமோதி, மெள்ளவேகண்சிவந்த ருகேபார்த்து மேனியெல்லாஞ்சோபமுமாய்வெளுத்துக்காட்டி, கள் ளவே குறுவேர்வைவேர்த்துதானால் காலனுயிர்வரவதுவு முண்மை தானே கூசா

உண்மையுடனடிவயற் முதுகும்வீங்கி யுறுமூலவக்கினியுங் கே டதாகி, வண்மையுடன்னமதைவெறுத்துக்காட்டி வயர்பொருமி மே ல்மூச்சாய்வாந்தியாகி, பெண்மையிலேதசநாடிக்குன்றிவாதம் பித்த மதுவொடுங்கிவளர் கபமேற்பொங்கி, திண்மையுடன்மூச்செடுத்து மா ணம்வந்து சேருமெனமுன்னோர்கள் தெளிந்தவாறே. கூஎ

தெளிவானவாதபித்தஞ் சேத்துமத்தால் சேர்ந்துவரும் பலபி ணியுந்திரத்திறேமு, வளிவாகநாலூற்றுநாற்பத்தெட்டு வந்தனுகில் தேகமதில்வலுவியாதி, நெளிவாகப்பித்தமொடுஉஷ்ணமிஞ்சி நிலைத் தபிணியவுஷதத்தால்திரும்தீரும், பளிபாடாஞ்சேத்துமமொடுவாத ஞ்சேர்ந்தால் பலநோய்க்குமரணம்வந்துபற்றுந்தானே. கூஅ

பற்றுநோய்தீரவென்றால்தர்மம்வேண்டும் பாங்கானகுணம்வே ண்டும்வணக்கம்வேண்டும், சித்திரமாயவிஷதங்கள் செய்யவேண்டும் செய்மருந்துசுத்திலுள்ள பத்தியம்வேண்டும், முத்திபெறும்வயிததி யத்தின்மேல்கிருபைவேண்டும், முன்னோர்கள்நூல்முறையே நடக்க வேண்டும், புததியுடனிப்படியேநடந்தபேர்க்குப் பிணிதிருமென்று மனம்பொருந்திச்சொல்லே. கூகூ

பொருந்தியதோர்சதகமொன்று நூறுஞ்சொல்லிப் புகழ்பெரிய நிகண்டுதொல்காப்பியபுராணம், அருந்தவஞ்செய்காரிகைநன்னூலுக் கிந்நூலானவுரிச்சொல்நேமி நாதத்தோடு வருந்துபன்னூல் பாட்டிய லுமெழுத்துஞ்சொல்லு, வரும்யாப்புபொருததவிதி யலங்காரஞ்சொ ல் திருவடியேஞுரைத்தேன் அறிவுள்ளோர்க்குச் சிறப்பாகக்கொள்வ துங்கள் சிறப்புத்தானே. ௱

சிறப்பாகஆராய்ந்துவாதபித்தஞ் சேத்துமமூந்தொந்தமுடன்இ ருந்திரா, உரைப்பானதத்துவத்தின்பஞ்சபூத முட்கிரிகைசநாடிவா

வாய்வுபேத நரைப்பாகத்தென்பொதிகை தன்னில்வாழுமகன்முனிக்குக்குருபரன்தானன்றுசொன்னா, அரைப்பாகமினையாம ஓணர்ந்தபேர்க்கு வம்புவியிலாதியோர்வாழ்வுண்டாமே. ௱க

உண்டானவிந்நூலை யுணர்ந்தபேர்க ளுலகுதனில் பெரியோர்களாத்மஞானி, கொண்டாடும்வித்தைமதி புத்தியுண்டாங் குருதெரிசனமுமபெருகிஞானமுண்டாம், வண்டாடுமபூமாது நிறைவாழ்வுண்டாம் காமோட்சஞ்சாயுச்சியம் பதமேநல்கும், பண்டோர்கள் நூல்முறையாராய்ந்துசொன்னேன் பாங்கானசதகமெனும் நூறுமுற்றே()

வைத்தியசதகநாடி முற்றிற்று-ஆக செய்யுள்-௬௯௫.

---

குறியடையாள நாடி.

---

நெறியுடன்குருபர்தத்தை நினைந்துநீநேசதாக்கிக்
குறியடையாளம்நாடிக் குறித்துண்டுயறியவேண்டும்
செறியுடள்குணங்கள்தன்னைத் தெறிந்தறிந்தறிந்துணரவேண்டும்
அறியெட்டுங்குணங்கண்டோர்க ளவனியில்வைத்தியோரே. க
அட்டமாங்குறிகள்நாடி அகந்துநீயுணரவேண்டி
வட்டமாய்முகங்கண்பல்லு வாயதுநாக்குக்கையும்
கட்டுறுவலசலங்கள் கைதனில்நாடிதானும்
திட்டமாயறிந்துசெய்யும் தாரணிவைத்தியோரே உ

வேறு.

வாதரோகமனுஷர்கள்மாமுகம்
சூதிலோர்கருப்பாய்விடும்உண்மையே
வேதநீதிவிளங்கியபித்தத்தின்
மீதுவாய்முகமெய்மஞ்சளெய்துமே. ௩
எய்துசோபமெழுந்தவர்தன்முகம்
மெய்யதாகவேமேனிவெளுத்திடும்
ஐயருறைசெய்யவருமுறை
செய்யவாறுந்திகழும்பண்டிதரே. ௪

வாதத்தோர்விழிகறுத்து வரிசிவந்துகண்டிருக்கும்
திதுத்தபித்தத்தோர்க்கு செய்விழிமஞ்சளிக்கும்
கோதுத்தசேஷ்மத்தோர்க்கு கூர்விழிவெளுத்திருக்கும்
ஏதுத்ததொந்தத்தோர்க்கு யிருவிழிபாலுமாமே. ௫

விளங்கியவாதரோகி தந்தமேமிகக்கறுக்கும்
வளம்பிடபித்தரோகி மஞ்சளித்திருக்குமானே
உளங்கொளாசேஷ்பரோகி பல்லொளிவெளுத்திருக்கும்
துளங்கிடயறிந்துகொண்டு சொல்லுமிக்குணங்கள்தானே. ௬

வாதத்தோர்நாக்கறுத்து வண்ணிறதுண்ணிதமாய்
மாதுவைபித்தத்தோர்க்கு நாவுமஞ்சளித்திருக்கும்
பேதமாய்கசந்திருக்கும் பொய்வணைசேஷ்பத்தோர்க்கு
தாதுகாவெளுத்துநோயும் தாக்குமேயெண்ணத்தாலே ௭

## வேறு.

கண்ணுஞ்சிலம்பனத்தோவல்ம்விளங்கவே
அன்னிலத்திரல்வமிஞ்சபொங்கியவே
சொன்னதின்குணமன்றியதொய்ந்ததோ
என்னில்பலபலவாய்விழுமென்னவே ௮

ஓங்கியவாதத்தோர்க்கு நீர்விழும்மூளைமூக்கில்
பூங்கொடிகுத்துநொந்து செறித்துடன்பொருமிவிழும்
பாங்குடன்பித்தத்தோர்க்குப் பசியநீர்சிவந்துகாட்டும்
ஏங்கவேசுருக்கதாக யெழுந்துடன்கடுத்துவிழும். ௯

வீளுமேசேஷ்பத்தோர்க்கு நீர்விழும்குணமுரைக்கில்
வாளுமேவெழுந்துநொந்து நயம்பிரவிக்கங்கண்டாய்
வாள்விழிமானேதொந்த ரோகமானிடர்க்குத்தானே
கோள்வதாய்பலமாய்விழும் மென்றுதான்குறித்துக்கொள்ளே. ௰

நாடிதான்பார்க்குப்போது நல்மனதுடனேவேண்டும்
தேடிடுங்குருபாதத்தைத் தினமதாய்உன்னிப்பின்னே
மூவிரல்கனத்துமூன்று நாடியுமறியவேண்டும்
கூடியவியாதிதன்னைச் சொல்லுவேன்வைத்தியோரே ௰௧

ஓடிடும்நாடிபார்க்க உண்மைதானுரைகககேளாய்
ஆடவர்வலக்கைநாடி அரிவையரிடக்கைநாடி
பாடமாய்தேடிநாடி பரிவுடன்பகரவேண்டும்
ஊடறிந்துரைப்போர்நல்ல உத்தமவைத்தியர்தானே. ௰௨

சொல்லிய உந்திக்கிழே சுழித்ததோர்யெழுத்தைப்பற்றி
எல்லையில்சிறந்தநாடி எழுபத்திராயிரங்கள்
வல்லகேசரிதன்பாதம் மகிழ்ந்துதானோடிநிற்கும்
நல்லதாம்மூன்றுநாடி நயந்துநீறிந்துபாரே ௰௩

அருமறைநூலாராய்ந்து அங்கையில்நாடிபார்க்கப்
பெருவிரலங்குலத்தில் பிடித்துடநடுவேதொட்டால்

ஒருவிரலோடில்வாதம் வுயர்நடுவிரலில்பித்தம்
திருவிரல்மூன்ருய்ப்பின்னுஞ் சேத்துமநாடியாமே. க௪

அன்னமேகோழியோனுன் அணிமயில்நடக்கும்வாதம்
பின்னையோராமையட்டை பெருத்திடில்பித்தமாகும்
சொன்னதேமொழிமடவாய் சுத்தியதவளைபாம்பு
எண்ணியேஐயமென்று யியம்பினர்வேதந்தானே. க௫

அங்கையைமுறுக்கிநெட்டி அடவுடன்முயரவாங்கி
செங்கையைப்பிடித்துநாடி திறத்துடன்பார்க்கும்போது
பங்குரபகுத்தநாடி பையவேயோடுமாகில்
மங்கைபற்கரசேயீது வாதமாம்நாடியாமே. க௬

உத்தமோர்நாடிதொந்து உயிரதுபதரிநாடில்
பித்தமாம்நாடியென்று பின்னையுமறிந்துகொள்க
மெத்தவேயிரண்டுதேங்கி விரைவுடன்தெரிக்குமாகில்
சித்தமேஅறிவீறையா சிலேத்துமநாடியாமே. க௭

ஆனதோர்வாதநாடி அடர்ந்துறவலுவாய்நிற்கில்
ஊனமாமுட்லில்நோய்கள் உலாவியேநிற்குமாகில்
தானமாம்பித்தனுடி தான்வலுவாகநிற்கில்
கானமாங்குழலினளே காய்ச்சலுங்கடினமாமே. க௮

வாதமுமையத்தானு வலுவுரநிற்குமாகில்
மோகியவியாதிதீர மூன்றுநான்செல்லுமென்ன
ஆதலால்பித்தநாடி அகலதுபோலேயோடில்
வேதனைப்பின்னேகாய்ச்சல் மூளுமென்றறிந்துகொள்ளே, க௯

பித்தமுமையந்தானும் பிரண்டெமூழ்தோடுமாகில்
சித்தத்தில்வைப்புநீரும் செருக்குளிருளைந்திரும்பல்
பத்திமெய்காய்ந்துவேர்த்துப் பசிகெடும்வலசலமும்
சத்திலும்வழுப்புமான சரீரமும்வெளுக்குந்தானே. உ0

வாதமும்பித்தமையம் வன்புறத்தேங்குமாகில்
ஏதுக்கள்பலதுஞ்சீதம் ரெட்டிக்கரோகம்காணும்
தீதுத்துவலைதப்படுத்துந் திரிதோஷபிணியுமுண்டாம்
தாதுக்கள்கையாமெய்யும் சத்திகெட்டுள்ளுந்தானே, உக

வாகினிஅன்னங்கோழி மயிலெனநடக்கும்வாதம்
ஆகிடஆமையட்டை யிவையெனநடக்கும்பித்தம்
போகியதவளைபாம்பு போலதுசிலேஷ்மந்தானும்
ஆகியநாடிமூன்று மமர்ந்திடில்சன்னியாமே, உ௨

அந்திதநாடிதானு மரணைவால்துடியேபோலாய்
சந்தித்தமாதரோடு தான்புக்கிமுண்டாரொன்ன

வெந்தித்தவிதரியோடில் வேதனைமிகவுமுண்டாம்
வந்தித்தமதங்களாலே மதியுள்ளாராய்ந்துகொள்ளே. உந

பித்தமும்வாதநாடி பேசியஐயநாடி
ஒத்ததோர்சரியாய்தன்னி லுலாவியேநிற்குமாகில்
சுத்தமாமுடலந்தன்னில் சொல்லவேவியாதியில்லை
முத்தணிமுடல்நம்மாதே மொழிந்தனர்முனிவல்லோரே. உச

கையைநீர்பிடித்துயர்த்திக் கடுகவேநிமிர்த்திபின்னும்
உய்யநீவேண்டுமென்று உகந்துநீர்நாடிசொல்லு
மையவேதொங்கிதொங்கிப் பதறியேநிற்குமாகில்
ஐயமாநாடியென்று அறிந்துநீர்விட்டுப்போகே. உரு

தேனௌமெரித்துச்சற்றே தெரிகுணஞ்செப்புமாகில்
மாளவேவபானவாய்வு வந்திடுஞ்சன்னியுண்டாம்
மீளவேயல்லமுன்னுள் விதிப்படிவந்ததாகும்
நாளொருதிங்கட்குள்ளே நாசமாய்ச்சொல்லுந்தானே, உசா

ஏற்றியதீபம்போலும் எதிர்நுனிநெய்யைப்போலும்
தோற்றியநாடிதானுந் தொய்யவேதவளைப்போலே
போற்றியேகுதித்திட்டாலும் பொருந்தியேநடத்திமுந்தும்
மாற்றியேகுழலினுள்ளே மரணமென்றறிந்துகொள்ளே. உஎ

வேறு.

கடிதானநாடியதுதோள்மீதிலேற கண்ணிமேலநீரொடுக்கும்
வடிவானமுகம்நின்றுமூக்குமலர்ந்து மோர்நாவுவழுவழுக்கும்
அடிதானமூலமதுஉள்ளேவலித்திடில் அடிவயிறுதொப்புள்களும்
நெடிதானவேதமுனிஉரைநூலிதென்று நீநிச்சயமறிந்துகொள்ளே. ()

அசாத்தியக்குறி.

நடுக்கும்நாடிமிகப்பதறும நாவும்பல்லும்வரண்டிருக்கு
மடுக்குங்கெட்டுவிழியிரண்டும் மேலேநோக்கும்விதிபார்க்கும்
தொடுக்குகின்றசிலேத்துமமுந் தொண்டைதனிலேநின்றுழலும்
அடுக்குமதுவேகுறியானால் அங்கேசொல்லவேண்டாமே. உகூ

வாதத்தில்வாதங்காணில் மந்தக்கள்புளிப்பருந்தல்
வேதித்துப்பித்தங்காணில் பருஞ்சூடுகளப்பருந்தல்
மூதித்துஐயங்காணில் முழுதுமேயினிப்பருந்தல்
தீதுத்தமுன்றுங்காணில் திருபலவரிக்கின்றோ. நூ

வாதத்தில்பித்தங்காணில் வன்பிணிக்கசப்பருந்தல்
பேதித்துபித்தமையம் பதரியேநிற்குமாகில்
மாதுத்தகுழலினுள்ளே மாகதபிலமுங்குன்றி
எதுற்றவசனந்தானும் எதிர்த்திடுமென்பர்தானே. நக

குன்மமாம்வாதமாகுங் குறைகடல்தொனியேபோலாம்
சன்னியாய்நாக்குப்பச்சை தனித்தனிப்பழக்கம்போலாம்
பன்னியதிருணிக்கெல்லாம் கதிருபோல்நடப்பதாகும்
முன்னவருரைத்தவாறு மொழிந்திடகேட்டதாமே, ௩௨

ஞாலமேற்கசடந்தன்னில் நயஞ்சலுமடையில்ஜூர்க்கும்
காலம்மேவாதந்தோன்றுங் கடும்பகல்பித்தந்தோன்று
மாலையிலேயநாடி வாதியாயோடிநிற்கும்
சீலமாவேதமோதி தெரிந்தவர்மொழிந்தவாறே. ௩௩

தாங்கிடும்வலமுமீரும் தவிரிடும்செவிகேளாது
வாங்கிடும்கண்ணீர்மெத்த வந்திடும்நாவும்பல்லு
வேங்கிடுங்குணங்கள்கண்டால் விட்டுநீர்கண்டுபோயும்
பாங்கியகண்ணிஞளே பாரினிலமைந்தவாறே. ௩௪

வேறு.

கண்ணால்முகங்கள்வேறுபடுக் காலோட்டகமும்வீக்கமதாய்
தண்ணீர்தாகமிகவுண்டாந் தரியாப்பித்தமூர்ச்சையுமாம்
விண்ணேமடுக்கத்திமிருண்டாம் மேனிகறுத்துபடபடக்கும்
எண்ணுக்குறிகளிதுகண்டா லிதுவுமரணக்குறியாமே, ௩௫

மூக்குநீண்டுநிலம்புரண்டும் முழங்கிதலையும்மிகத்தேற்கும்
நாக்குகுன்றிபலப்பேசி லமாய்ப்படுப்பானெழுந்திருப்பான்
விக்கலெடுக்குமிகப்பதரும் வெறிபோல்பலதும்பித்தமிடும்
தாக்கமரணமிதுவென்று சாற்றிஉரைத்தார் தவமுனியே. ௩௬

கண்ணைமுழித்துப்பிரட்டுமெனக் கைகால்நடுக்குந்தலைசுழட்டும்
விண்ணைப்பார்த்துவிழிபிரட்டும் மேனிவரண்டுவெற்றிபெரும்
நண்ணிலொருவன்தனைப்பார்த்து நலமாய்நன்மைபகுத்துரைப்பான்
எண்ணிப்படுப்பானெழுந்திருப்பான் இதுவேமுசார்கிலைக்குறியே, ()

வேறு.

ஊசிபோல்மூக்குநீண்டு உடம்பெலாம்நரம்புதோன்றி
பாசிபோல்கண்சிவந்து பரிந்துநீர்போற்றும்வாதம்
கூசிடவேண்டாமிந்தக் குணங்களுண்டானதாகில்
காசமாய்ச்சாவிதென்று கையைவிட்டப்பாற்செல்லே. ௩௮

நெஞ்சுமேலுடம்புவற்றி நிலைபெறநரம்புதோன்றி
பஞ்சுபோல்நாவுங்கண்ணும் பாண்டமும்வெளுத்துத்தோன்றி
கொஞ்சியஅண்டம்வீங்கிக் குங்கியமலமுந்தீர்ந்தால்
துஞ்சுவதுண்மையென்று துணிவுடன்செப்புவாயே. ௩௯

மூதுகொடுவைபறவீங்கி மூலமுந்தாதுகெட்டு
செவியொடுகண்ணும்வாயும் சேயனப்பதியுங்குன்றி

முடிகியவாறுமூன்றும் முதியவன்கீழ்மையானல்
விதியவன்சவமேயென்று வாண்டுநீஅகண்டுப்போயே. ௪௰

மூக்கினில்மூச்சேருது முடிந்திடும்வாளன்றி
ஊக்கமொட்டிடம்புதேய்ந்து உந்திநிம்மஞ்சைக்குன்றும்
நீக்கிய அஞ்சாநாளில் நிறைத்துயிரிறந்துபோகும்
வாக்குடன்மண்ணின்கூறாய் மறைந்ததுவகையிதாமே. ௪௧

நாக்கொடுபல்லும்வாயும் நகங்களுங்கறுத்துசற்றே
மூக்கொடுசெவியுந்தாழ்ந்து முகந்துடைபிறங்கள்கையால்
தூக்கமென்றுநீறி சொறிதலையறுநோவாம்
வாக்கொடுதுரையுந்தள்ளு மரணமென்றறிந்துகொள்ளே. ௪௨

கால்வளத்துயருமூக்குங் கடுவிழிசிவக்குமாகில்
மேல்வெளுத்தங்கந்தானுய் விழிதனித்தோடுங்கண்ணீர்
மால்வளைதனையுங்கூந்தல் வனிதையேசொல்லக்கேளாய்
நால்வகைக்குறியுஞ்சொன்னேன் நமனுயிரோகுவாரோ. ௪௩

நாடியிற்றெளிவினுலு கற்குறிகுணத்தினுலும்
நீடியவிழியினுலும் நிலைபெருமேருகத்தாலும்
கூடியவியாதிதன்னைக் குறிக்குணப்பாடத்தாலும்
சூடியகுணங்களாலே சுகம்பெற்றறிந்துசொல்லே, ௪௪

வாதமும்பித்தமைய மற்றுள்ளவியாதிதானும்
நீதமாயறிந்துகொள்ள நிர்த்தமேகேளாய்மானே
பாதமுஞ்சிரசுமேல்க்கை பரந்தமூவற்குத்த னம்
மீதினிலுள்ளவாறு விபாமாமுனிவன்சொல்வான், ௪௫

உந்தியில்வெர்துங்கிநிர்க்கு முறியாகவெட்டுவாதம்
நந்துறசூலநிற்கும் நாற்பதுபித்தத்தாலும்
இந்துசேர்யிடதுமார்பில் ஐநான்குஇருபதாகும்
சிந்தையில்கபமதானுஞ் சேர்ந்திடுமென்பதென்றே. ௪௬

வேறு.

சொல்லுவாதமென்பதுக்குந் தோற்றும்பித்தசிலேட்டுமமாம்
கொல்லுங்கஞ்சவாதமெனக் குறிக்குங்குடலில்வாதசூலை
புல்லுஞ்சுவர்ணகுண்டலமாம் புகலும்கடுக்குவாதமுமாம்
வெல்லுமிவைகள்கண்டறிந்து விருப்பியுரைத்தார்மன்னவரே, ௪௭

வேறு.

சுகமெனச்சுருட்டுவாதஞ் சுரோண்டிதமிருட்டுவாதம்
நகமெனதரணிவாதம் தனிச்சிலைவாதம்தக்கன்
ஆகமதுமிரட்டும்வாத மகம்தறிமுருக்கும்வாத
மகமெனதிரட்டிச்சொன்ன மந்திரிதலைவருமே, ௪௮

வாதமேகலிலச்செய்யும் வயற்றினிற்பித்தஞ்சேரும்
சேதமேசெய்யும்மைய மசிசத்திலகண்டமேலே
நாதனார்அருளிச்செய்த நன்முகத்தாகபாரீர்
வேதநூல்விதியிதென்று விரும்பியேவிளம்பினாரே. ௪௯

எண்பதுவாதந்தன்னில் யிருவகைபகர்ந்துகாணில்
நண்பெனஅறைக்குமேலே நாற்பதுவாதமாகும்
பண்புசேரறைக்கிக்கிழே பத்துநான்காகும்வாதம்
வண்புசேர்குழலினாளே வரசிடத்தியல்புதானே. ௫0

வாதந்தானெண்பதுக்கும் வன்பித்தம்நாற்பதுக்கும்
சேதந்தானகண்டுசொன்ன சாஸ்திரகாரணத்தின
ஊதந்தான்உணர்ந்துபார்த்து உண்மைபன்டிதரைச்சொல்லும்
போதந்தான்வியாதிபார்த்துப் புகன்றிட்டார்முனிவர்தாமே. ௫௧

வாதத்தின் குணம்.

வாதத்தின்குணமேதென்னில் வயாதுபொருமிக்கொள்ளும்
தாதத்தில்மேனிகைக்கா லசந்துமேகடுப்புத்தோன்றும்
தீதுத்தசிறுநீர்தானுஞ் செறித்துடன்கடுத்துவீழும்
போதுத்தவாதமென்று புகன்றனர்முனிவர்தாமே. ௫௨

ஆனதோர்வாதம்பற்றி அருண்டுவந்துலேச்சல்காய்ச்சல்
தானமிலாதிருக்கும் தனத்துடல்விசையிற்சேரும்
கானமாக்குரல்கள் கடுத்துடல்கறுப்பாய்வந்தால்
வானகையின்னாள்சொன்ன வாதத்தின்குணமிதென்றே. ௫௩

வாதமேகதித்தபோது வாய்வுமேலெழும்பிமீளும்
சூதமாயிரும்பல்வந்து துடர்ந்திடுஞ்சன்னிவாதம்
பேதமேசெய்கிறுணி பெருவயற்றினில்தோஷங்கள்
போதவேவிம்மிதென்று பொருந்தவேமுனிவன்சொன்னார். ௫௪

பித்தத்தின் குணம்.

மயக்கிடும்மேல்தளர்ந்து மந்சணித்திருக்குங்கண்ணும்
தியங்கிடும்கிறுகிறுத்து செருக்கிநெஞ்செறித்திருத்துக்
கயந்திடும்பித்தரோகம் கண்குணமிதுவாமென்றே
வயங்கினமுனிவர்தாமும் வகுத்தனர்வேதநூலே. ௫௫

எண்ணியபித்தமாகி யிப்படிசிரசுநொந்து
கண்ணுபல்சிறப்புத்தோன்றி கருணையுமையல்காட்டும்
திண்ணமேதாகந்தோன்றுஞ் சிருசாவிஷமூன்றாகும்
உண்ணுநாவுலர்ந்துபித்த உற்றநின்றிறமுமாறும். ௫௬

பித்தத்தின்வெப்புபற்றிப் பெருத்திடுஞ்சத்திருன்மம்
சித்தத்துள்வழித்தெறிந்து தெளிவாகக்கழிச்சலாகு

மெத்தத்தின்னாலோடு மிகுந்துதான்நெரித்துக்கொல்லும்
கைத்தலநாடிதானுங் கதித்திடில்பித்தமாமே. ருள

சிலேஷ்மகுணம்.

இனிப்புடன்வெளுக்கும்நாவு யெடுக்கொணாடக்கொணாது
பனித்தண்ணீர்பாயும்பஞ்ச மேனியும்வெளுத்திருக்கும்
செனிப்புடன்குளிர்ந்துவாடி சிலேற்பமில்லாததாலே
முனித்திடுஞ்சிலேத்துமத்தின் கூறென்றுமுனியுரைத்தார். ருஅ

தலைக்கனத்துடனேதும்பி தன்செவிமுக்கங்கனக்கும்
வில்கியேஉதிரமூந்தி விரைத்துமெய்சுழக்கடித்தும்
பிலகிய அசனம்வேண்டாம் பின்னியசிலேத்துமத்து
நிலகியசுரங்கள்கண்டால் நிச்சயமறிந்துசெய்யே. ருகூ

ஐயமேகதித்தபோது அறியவேபொருமல்காணும்
மையுமந்தாரகாசம் நளிர்குளிர்விக்கல்சத்தி
செய்யுமாமூச்சடைப்பன் திதுருகாசரோகம்
தொய்யுமாமிளப்புகாசம் தோன்றுமென்னரன்சொன்னரே. சூய

வாதபித்தத்தின் குணம்.

கொள்ளுகவாதம்ரண்டும் கொடும்பித்தமொருக்காலேடில்
கள்ளமாய்வயறுவிம்மிக் கனக்கவேவாய்வுதோன்றும்
தெள்ளியகோதையர்மேல் சிந்தனைமிகவுண்டாகும்
தெள்ளியவாதபித்தந் தொந்திப்பென்றுரைக்கலாமே. சூக

பித்தவாதந் தொந்திப்பின்குணம்.

இரிந்திடுபித்தமிரண்டு மீரறைவாதமோடில்
பரிந்திடில்வயறுநெஞ்சும் பந்தெளிர்ந்தளர்ந்துமெய்யும்
வரிந்தெடுத்தலைகிறுக்கும் வயங்கிடுமேல்வெதுப்பு
முரிந்திடுபித்தவாத முறைமையையறிந்துகொள்ளே. சூஉ

வாதசிலேத்துமத்தின்குணம்.

வயந்திடும்வாதம்ரண்டு மொருசிலேத்துமமோடுமாகில்
வியர்ந்திடுங்கைகால்சோர்ந்து வுயர்கனத்திடுப்புநோகும்
தியங்கிடுந்தாதுகெட்டுச் செனிப்புடன்குறைந்துவாடும்
மயங்கிடுவாதத்தோடு மருவியசிலேத்மந்தானே. சூங

சிலேத்மவாதம் தொந்திப்பின்குணம்,

பாரித்தசிலேத்மமிரண்டு பரிந்தொருவாதமோடில்
கூரித்துக்குளிர்ந்துகூசும் குறிபுயங்குணமுங்கெட்டு
நேரத்தநீருமுண்டாம் நெரிதலைகாகநோகும்
சீரொத்தசிலேத்மவாதந் தொந்திப்பென்றுரைக்கலாமே. சூச

பித்தசிலேத்மகுணம்.

மாகாமல்பித்தம்ரெண்டு மருந்தொருசிலேத்மமோடில்
தீதுடன்தலைவரண்டு திரைவிடம்பிடரிநோகும்

போதமாய்வயமேரகைக்கும் புந்தியில்குணங்கெடாகும்
திதுசெய்பித்தசிலேத்ம தொந்திப்பாம்திருவுகல்லாய் சுரு

சிலேத்மபித்தத்தின்குணம்.

ஓங்கியசிலேத்மம்ரண்டு மூறுபித்தமொன்றாயோடில்
ஓங்கிடுமிருமலிளை யிடர்செய்யும்வாய்வுதீரும்
ஊங்கொடுமுதிரமெய்யும் வுந்தியும்கெட்டும்வாயு
ஆங்கொடுசிலேத்மம்பித்தம் அவைதொந்தமென்றதாமே. சுசு

வாதபித்தசிலேத்மகுணம்.

இழுத்திடும்வாதபித்தஞ் சிலேத்துமமிடறுமாகில்
பழுத்திடுமேனிநொந்து பதிந்திடும்பசியுமில்லை
கழுத்தொடுகையுங்காலுங்கடுத்துடன்கனத்துக்காணும்
முழுத்திடுமுல்லைரோகம் மூவருந்தொந்தத்தாலே. சுஎ

வேறு வாதகுணம்.

மெய்யேவெளுக்குந்தலைவலிக்கும் மேனிவெளுக்கும்கண்தூங்கும்
பொய்யேதுயருங்கிறுகிறுக்கும் போதநயனமெய்நெரியும்
கைகால்திமிர்த்துவுலர்த்திவற்றுங் கண்ணுமூக்குஞ்சன்னிகட்டும்
மையாமய்புமிகவலையும் வாதரோகருணமிதுவே. சுஅ

வேறு ஓடிவாதகுணம்.

ஓடிடும்வாதமாகி லுடன்தலைநெஞ்சுகந்து
தேடியசுரங்கள்கால்கள் திரமதாய்பிலக்கொட்டாது
வாடியேமேனிதானும் வரண்டிடும்நாவுபல்லும்
ஓடிடுமுடல்கள்தோறும் உளைஉடல்குத்துமுண்டே. சுகூ

மரணவாதத்தின் குணம்.

உதிரமுஞ்சுரமயங்கும் வாந்தியுமூக்கமுண்டாம்
அதிரமுங்கடுத்துமேலும் அற்பமேகடுத்துநோகில்
திதமுறுமரணவாதத் திருமுனிஅருளிச்செய்த
பதமுறுவேதநூலின் படியதுபகருவீரே. எ௰

வே று.

உளையமுதுடலந்தனிலெங்கும் உளையாதிருக்கிலுறும்பிளக்கும்
களையுமிகுந்துவயரளத்திக் கனக்கவாங்கிவானீரும்
விளையும்வெப்புத்தானுண்டாம் விடாதேமிகுந்துதலைகனக்கும்
தளையும்பருவனுதலாளே மரணவாதக்குணமிதுவே. எக

திமிர்வாதத்தின் குணம்.

பார்த்துமெய்கலந்துவாடி பருவெண்புதசையுங்கெட்டு
நாற்பதுவலுவாவிம்மி நடப்பதுகூறுவாய்வு
ஊர்ப்பதுசரீரந்தானும் வுறதிகெட்டுளைவுவெற்பும்
சேர்த்துடல்ககனம்போலத் திமிர்வாதமென்றார்முன்னோர். எஉ

அம்புகவாதகுணம்.

நாக்குவிந்துஒருசாநன்றாய் கையிகால்விழுவதன்றி
விக்கஞ்சரீரமூர்ச்சிக்கும் விஷம்போல்மேனிகொட்டரவொட்டார்
ஆக்கைசெரியும்நமநாளு மதுதான்பத்துபதினைஞ்சு
ஊக்கமுடனேதப்பினுக்கால் வுண்மையாகப்பிழைப்பினரே. எங

நரித்தலைவாதத்தின் குணம்.

நரித்தலைவாதநரம்புகள்வாய்வு கோபித்தொன்றாய்
அரித்திடுந்தலைமேல்கைகால் அங்கமோடுளைந்துவெம்பி
முரித்தது இரங்கிவந்து முழங்கால்கைகால்கடுக்கும்
நரித்தலைவாதமென்று நவின்றனர்முனிவர்தானே. எச

கைகால்முடங்கினவாதகுணம்.

உடலதுவெதும்பிகைகால் உடலதுகடுத்துநொந்து
கடலுதாங்கால்கரங்கள் கனதாப்போலுயர்ந்துகாணுஞ்
சடமுதுவிழுந்தாகுஞ் சலங்கெட்டுந்தோஷமுண்டாம
முடமாய்கைகால்தானு முயங்கினவாதமாமே. எரு

சுருக்குவாதத்தின் குணம்-வேறு.

கைகால்விரல்கள்சுருண்டுவிடுங் கடுப்புநாவுக்குளறிவிடும்
மெய்யேவடிவுமேல்வெதும்பும் மேனிகற்பமுண்டாகும்
ஐபாயிதுவின் குணஞ்சொன்னோம் அறிவீர்புத்தியுடனே
செய்யேதொய்யசொலக்கூறுஞ் சுருக்குவாதகுணமிதுவே. எசா

வேறு சுரோணிதவாதத்தின்குணம்.

கையுங்காலுநெற்றிதானுங் கனத்துநேர்ந்துவளவுமுண்டாம்
மெய்யுடன்றுருபங்கெட்டு வெதும்பிமெய்விரணமுண்டாம்
தொய்சுருட்டிமுடக்கிவிடுஞ் சுரோணிவாதமதுவென்று
வெய்யமுனிவர்தமிழ்நூலால் விளங்கச்சொன்னாரிதுவாமே. எஎ

சூரியவாதத்தின் குணம்.

சூரியவாதந்தோன்றும் சளியும்வெப்பும்
பாரிசாயுடல்கனத்துப் பாய்ந்துடம்பிரசுநொந்து
மூரிகொட்டாவியிட்டு முனிந்துமெய்தளர்ந்துசோர்ந்து
சீரிமெய்கண்ணுள்நாவு தியக்கிடுமென்றுசொல்லே. எஅ

வேறு-வரட்சிவாதத்தின்குணம்.

தலையுங்கனத்துவளர்ந்துமிக சம்மேறதாதுமங்கித்து
தலையுமயங்கமுழுதுளைந்துத் தடங்கக்குத்திகிறுகிறுக்கும்
வலையுமங்கம்நோய்மிகுத்து வளரவுலர்த்திவாதமிகும்
உலையும்வரட்சிவாதபித்தம் வுறுதியிதுகண்டுரையீரே. எகூ

வேறு-வரட்சிபித்தவாதத்தின்குணம்.

அக்கினியுழலை அகவுலர்ந்திருக்குங்காய்ச்சல்
மிக்காதினைரச்சல்மந்தம் மிருந்திடும்மூக்குநீர்கள்

தக்கதோர்மயக்கந்தோடு தலைவலிசந்துநோவும்
கைக்கனூர்வரட்சிபித்த வாதமாங்கருதிக்கொள்ளே. அ௩

வேறு-சன்னிவாதத்தின்குணம்,

கையுங்காலுமொருபக்கம் கனத்துத்திமிர்த்துச்சாய்வாகில்
மெய்யுமறவேவெதும்பிமிகக் கடுத்துநாவுந்தடுமாறுஞ்
செய்யுமென்னவாய்குளரி சீறுஞ்சன்னிவாதமென்க
உய்யும்படியும்வகைக்காணும் உலகோரறியச்சொன்னேமே. அ௪

வர்னவாதசன்னியின்குணம்-வேறு,

கண்ணும்வாயுஞ்சோபிக்கும் கையுங்காலும்யாவருக்கும்
நண்ணும்நாவுஞ்சோர்களர்ந்து நடுங்கியிருக்கும்யாவருக்கும்
எண்ணுஞ்செவியுஞ்சில்லென்று யெழில்கால்தன்னைநோவிக்கும்
வண்ணமிதுவேகண்டாக்கால் வர்னவாதசன்னியிதே, அ௫

வேறு-குதிரைவலிவாதத்தின்குணம்.

எண்ணும்வாதத்துள்ளியுடல் யியங்கும்பரியின்வாதகுணம்
எண்ணில்புருவங்கறுகறுத்து மியங்குங்கைகாலொருபக்கம்
எண்ணும்நுரையுமிகுந் துதுள்ளி மிதுவேதிருகவலியுண்டாம்
எண்ணிபபார்த்துவிழித்துநிற்கு மீளாதிதுவுந்திண்ணமிதே. அ௬

பிறவீச்சின்குணம்,

குத்துமெடுத்துக்கொண்டேங்கிக் குதித்துவிக்தும்மெத்தவியை
வித்துமிகவும்வுள்ளடங்கி வேர்க்குங்கற்பமிகவுண்டாம்
பத்திவெகுவாய்யெதிர்தள்ளும் பசியுமிகவும்பல்பூட்டும்
எத்தும்பிரவீச்சென்றுமிக எண்ணிமிகவேஎண்ணலாமே. அ௭

உள்வீச்சுகுணம்.

அடுத்தடுத்தெடுத்துக்குத்தி அதிகமாய்விரைந்துவேர்த்துப்
படுத்துமேகுக்கிபேசிப் பல்லுந்தான்கிட்டிநெஞ்சு
அடிக்கடிக்கிரியுங்குன்றி யசனமுமற்பமாகி
திடுக்கமாமுனிவர்சொன்னேர் திறமுடன்செப்பலாமே. அஅ

சுவாசகாசத்தின்குணம்,

பிள்ளைபெற்றதாயார்க்கு பெருஞ்சுரமுந்தலைவலியும்
உள்ளுமுழலைதவளமுடன் உதிரமிரப்புங்கழிச்சலுமாய்
மெள்ளத்தடுந்தகளைமூச்சும் விழியால்தெளிவுங்கெட்டிருக்கும்
துள்ளித்துடித்துசுவாசமது துணிவாயுயிரைப்பதைத்திடுமே, அ௯

சன்னி.

கத்துறுசன்னிதன்னைக் கசடங்களறியவேண்டி
உத்திருகூத்தைநோக்கி உறைந்துநாவதனிலூட்ட
கத்திருகறுததுக்கண்டால் கதிர்முறுசன்னியாகும்
பெத்ததில்வெளிப்பதாகில் பின்னையதல்லதரமே. ௯௰

குணங்குறிமிகுத்துத்தோன்றிக் குற்றமேசெனித்ததென்றால்
இணங்குமந்திரமந்தாகு மிவைகளால்மீதிலன்னம்
குணங்கொள்ளாக்குற்றமேறி குணமிதுகுறைந்துநின்றால்
குணங்கெடாதகன்றுசீவன் வுறுதியாய்ப்பேசலாமே, கூக

வேறு-முகவாதசன்னியின்குணம்.

கண்ணீர்த்தலையில்புருவமத்தில் கருதும்பல்லுக்குத்துண்டாய்
பண்ணப்பதைக்குமுகந்தன்னைப் பக்கம்பற்றியிழுத்திடிலேசீர்
நண்ணிப்பகரவிதிதானும் நாடுங்குணங்களதுகண்டால்
எண்ணிச்சொல்லுமுகவாத மிடறுஞ்சன்னியிதுவென்றே. கூஉ

பித்தத்தின்குணம்-வேறு.

காலொடுவயிற்றிலுற்றுக் கர்மொடுகண்கள்தானும்
சாலவேசிரசில்நின்று தானுடல்யெறித்துக்காட்டும்
மேலதுகுத்திநொந்து மின்மினியெரியுங்கண்கள்
ஆலிவேகுழலினுமே அறிந்துகொள்பித்தந்தானே. கூ௩

வேறு-பித்தகுணம்,

பித்தமேசிரசிலுற்றால் பின்வருங்குணங்கள்கேளீர்
உத்தசோர்கசனத்தானு மொளிவதுமாறிநிற்கும்
கைத்திடும்நாவும்பல்லுங் கரிகிடுஞ்சரீரந்தானும்
பித்திரைதானும்வாரா கெட்டகொட்டாவியாமே. கூ௪

வரட்சிபித்தத்தின்குணம்.

தலையும்வலித்துஉடலுலர்ந்து தாதுங்கெட்டுத்துயரமுண்டாம்
அலையுந்திரியுஞ்சேடமது அடுத்துமிகவேகிறுகிறுக்கும்
உலையும்மிகவேமனைந்துடிக்கும் ஓடியடங்கும்வரட்சிபித்தங்
கலையுமிகவேகற்றுணர்ந்து கண்டேமுனிவர்கழறினரே, கூ௫

காமாலையின்குணம்.

கைகாலெரிப்புக்கண்வெளுறல் காமந்தானுங்கட்டதும்
மையக்குழலாள்விடைமாறல் வயறும்பொருமல்வலிநோயும்
பையப்பறந்துயேகிவிடும் பதிவாய்சித்தர்மாணிடர்க்கு
துய்யவேதன்சொற்படிகருச் சொன்னார்முனிவர்முனிவோரே. கூ௬

பித்தபாண்டுவின்குணம்-வேறு.

இரும்பலுமிளைப்பும்நெஞ்சில் யிடியதுமிகவுண்டாகும்
வெறுஉருகிறுகிறுப்பும் மேனியும்வெளுறிப்போகும்
பெருகியபித்தபாண்டு யென்னவேபேசலாமே
கருகியபல்லும்நாவுங் காய்ச்சலுமிளைப்புமுண்டாம். கூ௭

வேறு-சுரங்காய்ச்சல்.

வத்திமேல்வெளுத்துப்பித்த மயங்கிடுஞ்சோபமாகும்
பத்தியேதலைநோயுண்டாம் பகலிராவென்னகாயும்

உத்ததோர்தேகந்நாளும் வொளிவுடன்ன லும்புகுன்றி
முத்திய அனலையீது முழுதுமுள்காய்ச்சலாமே. ௯௮

அந்திரபித்தம்-வேறு.

பரபரத்துடல்கலத்துப் பறந்ததுநடித்திறந்து
கரகரத்துளைந்துநெஞ்சு கணப்புனலிளைப்புமுச்சுஞ்
சரசரச்சொறிந்திமிர்ந்து தங்குமநீர்செய்யுமவெப்பம்
வரவராயிருமல்கோபம் வந்திரபித்தமென்றே. ௯௯

வேறு.

ஈதலாலுடலந்தன்னி லரமெனயிசைந்துகாட்டும்
வாதுறமுகம்பெருக்கும் வலஞ்செலங்கழிந்தநாளும்
போதமும்விரும்பிடாது புந்தியில்வடிவுந்தோன்றும்
நாதனார்சொன்னதீது நலங்கியசேத்துமந்தானே, ௱

இவ்வகைக்கிணங்கிதிற்கு மிருமியசிலேத்மமெட்டும்
தவ்வியகாசத்தோடு தயங்கியசிலேத்மகெட்டும்
ஒவ்வியபித்தத்தோடு உன்னியசிலேத்மம்ரண்டும்
கவ்வியவாதத்தோடு கலந்திடும்மிரண்டதாமே, ௱௧

வேறு-வாதசுரத்தின்குணம்,

கேளாமயிருஞ்சிலுசிலுத்துந் தலையுநொந்துமிகடுக்கல்
கீளாமுதுகும்பொருந்துந்தோல் கைகாலுளையுமிளைப்புமுண்டாம்
காளார்பெருத்ததண்ணீரில் கருத்துநதலையோடுடல்வலிக்கும்
மீளாபெருத்தவலஞ்செலமும் மிகவுங்கடுக்குஞ்செருககுமதே, ௱௨

வாதசுரத்தின்குணங்கேளிர் வகுத்தவன்முறைத்திடவே
சீதசுரமும்வந்திட்டுச் சிந்தைகலங்கிமெயிறுக்கிச்
சேதிட்டபுண்போலேசிந்தையுஞ் சிந்தசைந்துவிழுமாபோல்
பேதித்துலர்ந்துகழியுமலம் பெருக்கப்பசியுந்தோன்றுலே, ௱௩

வேறு,

நடுக்கித்தியக்கியயிர்க்கூச்சிட் டயர்ந்துந்தலையுமிகநொந்து
கடுகருங்கைகால்முரிகிமருங் கண்ணும்தோளும்பிக்கருகி
திடுக்கிட்டுதடும்வாய்வற்றிச் செல்லவரியசுவாசமது
துடுக்கனவந்துபொதுவாக சொல்வீர்வாதசுரமென்றே, ௱௪

வாதசுரத்தின்குணங்கேளீர் வன்னிக்குளிரப்பயப்படுதல்
சீதமிகுந்துதுறைகருத்தல் செனித்தேமன்னன் தீண்டாதல்
சேதங்கண்டுதலைநோதல் திருந்துந்நொப்பின்சலங்கடுத்தல்
பாதமுளைந்துநீர்குடிலம் பகைப்பும்விடாதுஇதுவாமே, ௱௫

விடாதேகைகால்கிழ்முதுகும் மெய்யுமிரண்டுவிலாப்புறமும்
தொடாதேநோவுங்குறையாது தொடுக்கில்புண்போல்நோவுண்டாம்

கொடாதேகஞ்சியெழுதினமுங் கொடுக்கிலதிகசுரமுண்டாம்
அடாதேமிகவும்மிரண்டிருண்டு அடுக்கச்சூடுமித்துவாமே, ௱சு

ஆமேயேழுநாளளவு அசனந்தொடாதேபட்டினியாய்
தோமேகஞ்சித்தண்ணீருஞ் சொன்னபடியேதானதுவும்
ஆமேயேழுநாள்கழித்தால் அருண்டேவந்தசிரமதுவும்
போமேயேழுநாளகழித்தால் பொருந்துமசனங்கொடுப்பதுவே. ௱எ

விஷசுரத்தின்குணம்,

சொன்னமறுபத்துநான்குசுரந் தோன்றவெடுத்துவிஷசுரங்கேள்
பின்னேகாலுங்கையசைவும பிரவிச்சானவிக்கல்களும்
கன்னமாதேகட்டிகொள்ளுங் கனத்தேவுளேவுமிகவுண்டாம்
மன்னேயசாத்தியசுரமென்று வகுத்தார்முனிவோரிருடிகளே, ௱அ

பித்தசுரத்தின்குணம்,

பித்தசுரத்தின்குணங்கேளீர் பித்தம்வெதுப்பும்உடலுழற்று
மெத்தக்கண்ணீர்தாகிக்கும் மிகவாய்க்கசக்கும்நாவுலரும்
ஒத்தநீரும்வலந்தானும் வொளிசேர்நயனஞ்சிவப்பாகும்
சுத்தியடங்குமுகமருக்கஞ் சொல்வாய்மிடரும்புண்ணாமே, ௱௯

பித்தசுரத்தின்குணங்கேளீர் பெருக்கத்தண்ணீர்தான்வாங்கும்
முத்தக்காசுஅமரத்தோலும் முதிரக்காய்ச்சித்தானருந்த
மெத்தப்பகருமதுதானும் வேண்டும்போதுமிகக்கொண்டால்
பித்தசுரமும்வந்தழிவும் பேணித்திருங்கண்டீரோ, ௱௰

பித்தசுரங்கள்பிலஞ்செய்யும் பெருக்கவயறுஞ்சிக்கழியும்
மெத்தநாறும்வலந்தானும் மேவிக்குளிருமிகவேண்டும்
ஒத்தவென்னவதுவேண்டா முந்துந்தண்ணீர்மிகப்பெருகும்
சுத்தபடனர்கைதானுஞ் சொல்லும்பித்தசுரந்தானே, ௱௰க

வேறு,

வஞ்சமித்தவாயும்பல்லும் வலமுடன்சலமுமெய்யும்
குஞ்சனித்திருக்குவாயுங் கசக்கும்நீர்வாங்கும்போது
வஞ்சவேவுடல்வெதும்பி மயிர்க்குச்சியுடனதான்சேர்ந்து
மிஞ்சியவலமுந்தீய்ந்து வெருண்டதோர்பித்தந்தானே, ௱௰உ

வாய்தந்தகுணம்,

கையைக்கொட்டிப்பாடுவதுங் கண்ணேநிமையாலொளிப்பதுவும்
மெய்யேமுழுதுமழிப்பதுவும் வேண்டாதெல்லாமுரைப்பதுவும்
பையச்சிரித்துமொடிப்பதுவும் பகந்தேவாக்குப்பகருவதும்
மையர்பொருந்தக்கண்மடவாய் வாய்தந்தத்துக்கிதுவென்னே, ௱௰௩

குழியடையாளநாடி முற்றியது-ஆக-செய்யுள்-கூ௱அ.

---

சீர்பெருமுனிவர்பாதந் தெளிந்துபின் னுலகத்தோர்கள்
பேர்பெருகுருவிலுற்ற பிணிபலத்துணர்ந்துதேர்ந்து
ஊர்பலனுடிக்கெல்லா முயர்குருவுற்றனுடி
சேர்குருனுடிநேர்மை சியலுடன்கூறலுற்ரும். க

கூறுவர்வேதனுன்கு குருனுடிநேர்மையெல்லாம
வீறுசெய்யுடலில்வாதம் பித்தமேசிலேத்மமூன்று
நேர்மைகண்டறியும்வண்மை வலுவாதனுடியொன்று
பேர்மைகொண்டெழுந்தநேர்மை பிரித்துடனுடைக்கலாமே. உ

ஓருயரசர்க்துமேதா னுடலிடைனரம்புதோன்றித்
தீமெழுபத்திராயிர னுடியேயிசைந்துபின்னும்
கார்செறிமேகம்போலே கதித்திடுமவியாதிக்கெல்லாம்
பேர்குருவாகவந்த னுடியின்புகழைச்சொல்வாம். ௩

சொல்வதோர்குருவேசிஷன் தொழுதபின்வணங்கிநின்று
செல்வனேயடியனகேழ்க்கத் திருவுளத்தருளிச்செப்பி
னல்வினைபாவமன்றி னலம்பெறுவியாதிவந்தால்
தொல்லேயேயடியேனென்று தொகுப்புறக்கேழ்ப்பதன்றேன். ச

சந்தவிருத்தம்.

நல்குவதோர்பிணியாளர் வந்தவகையேது னுடிகுறியசாத்தியங்களறிந்தவர்களேது, நல்குவதோர்புவியிலுள்ளோர் வந்தவகையேது நாதாக்கள்சிகரம்வரை கண்டவர்களேது, நல்குவதோரடிமுடியையறிந்தவர்களேது நமனுர்க்குவுயிர்கொடுக்கா திருந்தவர்களேது, நல்குவதோர்பாசபந்த மற்றவர்களேது னுதாரடிதாள்பணியைக் கண்டவர்களாரே. ரு

நாடிகுறிதிசையறிந்த நாதாக்களேது னுட்டமுடன்பின்கலேயுமறிந்தவர்களேது, நாடிசுழிமுனையை யறிந்தவர்களேது நடுப்புனலில்தீவினையை யற்றவர்களேது, னுடிகளேக்யானங்க ளறிந்தவர்களேது னுதாக்கள்மௌனநிலேகண்டவாகளேது, நாடிநிலேதொட்டறிந்துதேர்ந்தவர்களேது னுதாரடிதாளிணையைக் கண்டவர்களெவரோ. சா

மூலமுதலாதார மாறுஞ்சுத்தி முத்திநின்றபரவெளியின் முதன்மையாகி, பாலமதுமீதேறிசுழியினேடு பாதாளநாடியெங்கேபதுங்கும்பாரு, காலமதுவரும்போதுகவறுவீசுங் காத்தறிக்கைபோலிருக்கும்காலேப்பற்றி, சீலமுடனெடுக்கம்வருங்காலந்தன்னே திசைவாய்வுபாரித்துவலேகுவாரே. எ

## அசாத்திய சேத்துமகுறிப்பு.

நெஞ்சுலர்ந்து நெருங்குங்கபமீளே
பஞ்சுபோல்மேனி பதைத்துமேயூகிடில்
மிஞ்சுவோர்பகல் மீரொருதிங்களில்
வஞ்சகாலன் வருக்குமரணமாமே. அ

## திரிதோஷக்குறிப்பு.

சொன்னூர்தோஷம்மூன்றதனில் தோன்றுவாதங்கதித்திடிலோ
மன்னேசேத்மபித்தமது மருவிபுறங்கைதுடித்திடில்
பொன்னேயமனூர்புரம்போவார் போற்றுமாயுள்வேதமிது
அன்னையுமைக்கிததான்மகிழ்ந்து அரனுருரைத்ததிசயமே. கூ

அய்பாறுமாறுமங்கே யசவைச்சார்ந்து அண்டபகிரண்டமெல்லா நிறைந்துசாய்ந்து, மெய்பாறுதட்டுமெங்கே யிடிந்துவீழ்ந்து வேரழிகி வாய்போரும்பிறாணன்போகும், பையாறுபரவெளியில் மிரணமேபோகும் பரமனாருகிருந்துபார்க்கும்போது, வெய்வேறுபுரவியும்போ மிருளுமாகும் வேறிருந்தவகையிதென்று விளம்பலாமே, ய

விளம்பலாமவேறிருந்த தலந்தினூடே மேவிநின்றபரவெளியில் சமானமாக, தளர்பெறவேகட்டிவைத்த முடிப்புமங்கே சற்குருவின் வயப்படுத்த தலமுமங்கே, வளம்பெறவேவேறிருந்த விடத்தைக்கண்டால் மார்க்கண்டனுகவென்று வாழலாமே, உளம்பெறவேஆதாரமூலமங்கே வும்பவித்தகேசரமுமவுனமங்கே. யக

கண்ணிலொளிமறந்தவகை சொல்லக்கேளீர் காற்றொடுதீயெழும்பிநீர்தானெற்றி, எண்ணியொருகர்த்தனையு மறிந்துநீதான் ஏகமாய டைத்திணு லொளியேபோச்சு, அண்ணலருள்பெருமையினுல் காற்றைமேவி அவரொளிகள்மயங்காமல் அவனிதன்னில், திண்ணமிதுமா முனிவனுரைத்தநூலே செகதலத்தோரறிந்துபொருள் தெளிந்துகொள்ளே, யஉ

வாதமிகுந்தெழுந்துவரும்வகைதானேது வகையுடனேதாதுநிலைமதிதானேது, சீதமிகுந்தெழுந்துவரும் நிலைதானேது சிலேற்பனநீரெழுந்தவகை நீர்தானேது, பேதமுடன்பயித்தியங்களெழுந்ததேது பிரமேகம்நீர்க்கடுப்பு பொருள்தானேது, ஓதிவைத்தசாஸ்திரங்கள் படித்தபேரை யுறுதியுடனிப்பொருளை யுரைதான்சொல்லே, யங

வன்னியொருகால்கூடி மண்ணைச்சார்ந்தால் வாலைமிகுமணமிசையால் வாய்வுமீறும், திண்ணமுடன்வானநிலே காற்றுந்தீயுஞ் சேர்ந்திடில்பித்தமிகுங் கரைப்பாரு, உன்னியொருசேபனந்தா னைந்தும் காற்று உறுதியுடன்சுழிமுனையி னுரைத்துவாங்கும், சென்னிபருள்புகழ்படைத்த முனிவன்சொன்ன சித்தாந்தமனுரகவி தெளிந்துகொள்ளே, யச

வே று.

சுழினையும்பிராணன்தானுஞ் சூழ்ந்துதான்கலையச்சேரில்
நளினமாய்த்தாதுவிம்மி நார்க்கபிராகவீசி
கொழுமுனிபோலேகம்ப முகந்தலையுச்சியேறி
வழினையாந்தாதுநின்ற மார்க்கமென்றறிந்திட்டாயே, ௰௫

இருகாலப்போலுமுற்று வுறப்புகள்தன்னில்நின்ற
பருவமாய்ப்பிருணவாய்வு பற்றியேயிடையுங்கூடி
குறுவெனறும்பதிந்தபாணி தன்னையுமேற்கொணடேற்றில்
மருவியசிலேற்பனசீதம் வருமெனவகுக்கலாமே, ௰௬

அக்கினிமிதந்துதானு மத்தியிலூடுசென்று
புக்கியமலசலாதி போக்கியாகநின்று
சிக்கியேயுதாம்விம்மி செறிந்திடும்பித்தந்தானும்
வெக்கியமந்தத்தாலும் மிகுந்திடும்பசியினாலே, ௰௭

அக்கியேயுள்ளநாடி யபானனோடாறுவாங்கி
புக்கியதீயுங்காற்றும் பொருந்திய வாயுவுற்று
கக்கியகூடுகொண்டு காலினைமேல்மூலஞ்சேரில்
தெக்கியகுப்புஞ்சியுங் கடுத்துளிர்மேகமாமே, ௰௮

வேறு-சன்னிவருதல்,

சன்னியிருந்தெழுந்துவரும் தலந்தானேது தாதுவிளைந்திருந்தெழுந்த தன்மையேது, உன்னியொருசுரமிகுந்த வகைதானேது உட்காய்ச்சல்பிரமேக முகைமையேது, பொன்னியொடுபெரும்பிளவை படைத்ததேது புரையிருந்துசலமிகுந்த பொருள்தானேது, இன்னதெனப்பண்டிதரேவகையிதென்று இபமபிடிவிரிப்பொருளோயியம்புவீரே.

சன்னியிருந்தெழுந்தவகை விபரமென்னில் சாரமுடன்சிங்கவைதன் மூலஞ்சேரில், வன்னியொடுதண்ணீரும் வாய்வுங்கூடி வழுவாதசிங்கவையோ டிறுகச்சார்ந்து, பின்னியெழுஞ்சிலதுசனனி யாகும்பாரு பிரிவுடனேகாந்தாரி சுழினைபற்றி, தன்னிலதுவனமெலழும்பி தாதுவிம்முஞ் சத்துக்குப்பிலக்குறைகளுந்தாதுதானே, உ௰

ஏற்றமுள்ளவிடைநாடி கலையுஞ்சேர்ந்து ஈடாகவிசைநரம்பு தன்னைச்சாரில், மாற்கமுடன்மாங்கிஷத்தி லெலும்புதோன்றில் வகையானவிசைநரம்பு மடங்கும்போது, சீற்றமுடன்பரும்பிளவை படைத்துமோதுந் திறமாகவிசைநரம்பு மூருமுண்டாய், சாற்றமுறச்சீழிரத்தஞ் சலமுமேவுஞ் சங்கையில்லாவரசிமுதல் தானுண்டாமே, உ௧

பொன்னியொருபரும்பிளவை காலோடொக்கும் பொருந்தியநீராகவிவை மூன்றுங்கூட்டி, பின்னியேயெழுந்துசில பிளவைமோதும்

புடைத்தெழுந் தவிஷநரம்பில் தமருமுண்டாய், வன்னியொடுதண்ணீ ரும் வாய்வுங்கூட்டி வகையானவிஷநரம்பை மடக்கிக்கொன்று, சன்னியொடுபொருந்திடிகில் கொல்லுமந்த தகுதிபெறமாமுனிவன சாற்றநூலே, ௨௨

வேறு,

நாவிலேசெறியாமாந்தம் நலமுடனுதரஞ்சேர்ந்து
கோளிலேமந்தம்பற்றிக் குடலுறுகனலேவெம்பி
மீளுமேவன்னியோடு வாயுவுங்கூடச்சேரில்
பாழிலேசுரங்கள்மேவி பயித்தியம்விளையும்லாரே, ௨௩

வேறு,

கூடியதோர்சுரங்கள்வந்த வாறுநீக்கிக் குறிப்புடனேதசைகளுடமார்க்கங்கேளு, நாடிஙைசந்திந்தவிதந் தகைநீர்கூடி நாட்டமிடைபிங்கலையுஞ்சுழிளைபற்றித், தேடியதோர்புனற்றீயுங் காற்றுங்கூடிச் சேத்மபித்தவாதமெனச் சேருமூவ, ராடியதோர்மாலையனுமரனுமாகி மாகையிவைநாடிநீயறிந்துகொள்ளே. ௨௪

மயமாகச்சயரோகம் வரலாரேது மற்றுமொருபீனிசங்கள்மதிதானேது, வியாகசூதையிருந் தெழுந்ததேது விறுடனேநீர்ச்சுருக்குவிதனமேது, பயமாகக்கனவுநினை யறிந்ததேது பார்த்திருக்கக்குணமெழும்பும்பதந்தானேது, நயமாகப்பொருளிதென வகையிதென்று நன்மையுடன்பண்டித னடத்தச்சொல்லே, ௨௫

சயரோகமெழுந்தவகை சொல்லக்கேளீர் தலைதனிலேகனலெழும்பி நீர்தானேற்றும், மயமாகயிருபுறமுந் தமருண்டாகி மதுரமெனுருசிபிறந்து வாய்நீரூறி, சுயமாகமணடையில்நீர்க் கிழிறங்கி சுவாசமதுநெஞ்சில்வந்து சுவரியேங்கும், நயமானசயரோகம் நாடுங்காலை நன்மையுடன்பண்டிதரை நாடிப்பாரே, ௨௬

பீனிசத்தின் குணம்,

பீனிசந்தான்வரலாறு சொல்லக்கேள்மின் பேதமுமற்கனலெழும்பிவாய்வுஞ்சேர்ந்து, ஊனுருவிமண்டையிலே தொக்குட்பட்டு யுறுதியுடன்வாய்வுமக்கே யுறத்துப்பின்னும், ஈனமுடனேடுநீர் சீழிரத்த மிடித்துவருவருங்காத முக்கனேடு, தேனுருவிவந்ததுபோல்செங்கல்சிராயுஞ் சூலைவிழும்பீனிசத்தின் செய்கையாமே, ௨௭

சூலையின் குணம்,

சூலைவரலாறுதனைச் சொல்லக்கேண்மோ சுற்றியதோர்விசனதமமில் மேவிக்கொண்டு, காலையுமோயூடுருவித் தமருவிம்மி களிப்பது

த்கஞ்சேத்து, மாலையதுபோற்றெடுத்து நரம்பின்மீதே வகையானவி ம்மைமடக்கிக்கொள்ளும், கோலைவிட்ட குருடரைப்போல் தட்டழிந் துக் குடிகெடுக்குஞ்சூலையதுகுறிகண்டீரே, ௨அ

குன்மக்குறிகுணம்,

குன்மமதுதானெழும்பும்விபரமென்னில் குடல்தனிலேகல்லுமி ழும்நெல்லுமூக்கு, பின்னமுடன்வரும்பிச்சோரைசார்ந்தால் பீனுமது குடலோமேபாசுபற்றி, அன்னமதுசெறியாதுமயிரினாலே அசனமு ஞ்செல்லாதுகிழுமிதுத்தம், வன்னமயில்குழலாளேகுன்மரோக மாகு ற்றுல்குன்மமறவகைதான்பாரே, ௨௯

நீரிழிவுக்கு நிதானக்குறிப்பு,

சீர்பெறவேநீரழிந்திறந்ததாலே சேற்கையுடன்தொந்தத்தில்வி யாதியேது, பாரறியக்கிருமியினால்புழுக்களேது பண்புடனேவாதங்க ள்பழக்கத்தேது, பேர்பெறவேமூலத்தின்கடுப்புமேது பிலமாக்கிமா லைபதுபாண்டுமேது, பேர்பெறவேயிதுமுறையைப் பொருளைத்தேர்ந் துப் பிணக்கரவேயின்னதென்று பிரித்துச்சொல்லே, ௩௰

சங்கையில்லாத்திரிகோகஞ் சார்ந்தவேற்கைத் தானுருவியகதி யிலேதாக்கிப்பின்னை, பொங்கியேபூணுருவிதசையைச்சார்ந்து புளகி த்துநரம்பெல்லாம்பொன்மைகேட்டு, கங்கில்வந்தபுழுப்போலேரோக மெல்லாங் கருகியங்கேவுள்ளுலர்ந்துங்கார்போல்நீரை, பங்கிலங்கேப ருகிட்டநீரையெல்லாம் பாழானவிசைநரம்பைப்பற்றிச்சாயும். ௩௧

ஆதாரமாறுக்கும்நடுவேநின்ற அலபுருடநாடியங்கே அசவைச்சா ர்ந்து, கேதாரமூலத்தேநோக்கும்போது கிரிச்சனமாம்வாய்வங்கேகீ ழேமேனிக்குஞ், சூதானவுதரத்தில்கேவுகொன்று சுழினையுடன்மலங்க ழிந்துவுள்ளேவெந்து, பாதாரமூலத்தில் கடுக்கும்பின்னைப் பலவிதமா ய்ச்சிழிரத்தஞ்சலமும்வீழும், ௩௨

அந்திரமாயிடநாடி சிரத்திலேறி அப்புரத்தினூடுசென்று கபத் தைப்பற்றி, சந்திரவாய்வுமங்கேசிரத்தினூடு சுறுக்கெனவேயிடையி னூடுசூழ்ந்துகொண்டால், தந்திரமாய்திரேகத்தில் பதியுநோய்கள் சலமுடனேசிழிரத்தந் தொந்தத்தோடே, குந்தரமாயுள்குத்து கொடு ரஞ்செய்யுங் குறிப்பறிவீர்சிரசூலைக்குணமதென்னே. ௩௩

சீர்பெரியநாகமென்றவாயுதானே திறமான அத்தியென்றநாடியோ டே, பாரறியக்கடினமுறு வன்னியோடு பண்புடையசிரத்திலங்கேபதி ந்துமோதும், வார்பெரியவாயுவங்கேபாலந்தன்னில் வகையானவிசை நரம்பை வளைந்துபற்றி, கார்பெருகிவருவதுபோ லுருகிச்சாய்ந்து கா துதனில்வந்தடைக்கும் கருதிப்பாரே. ௩௪

நாடியென்றால்திசைநாடிபத்துண்டாகும் நலமுடனேஓர்விரலிலி ரண்டுநாடி, கூடியமூன்றுவிரலுங் குவிந்துநிற்குங் குறிப்பறிவீர்குருநா டிக் குறிகளெல்லாம், ஆடிநிற்குமைவிரலஞ்சு மொன்றுக்குள்ளே அதி னுடையகுட்சமிலே வாதவிட்டில், தாடிநிற்கும்விரல்மூன்றும்உருவு பா ய்ந்து தர்க்கமாய்நிற்குநிலைதனைப்பாரே. ௩௫

பாரென்றாலஞ்சுக்கூடுவதாகும் பற்றிநிற்கும்வரலாறு தன்னைப் பார்க்கில், தீரென்றபித்தத்தின்முன்னேநிற்குந் திசைநாடிபித்தமதுதா னாய்நிற்கும், தேனலேவாதமெனறு சொல்வார்மூடர் இருந்தியங்கே பாற்பளவில்வெருத்திக்கேகுர், தார்கொண்டகுருநாடி தன்னையாய்ந் தால் தன்மந்திரிபவனென்று சாற்றலாமே. ௩௬

சாற்றுகின்றபெருவிரலில் பூதநாடி சங்கையுடனுள் தூணடிவாத மென்க; ஏற்காமடுவிரலிற் பித்தமாகும் இசைந்ததிருவிரலதுவேஐய நாடி, கோர்த்தசிறுவிரலதுவே மரணநாடி குறிப்புடனேபாற்பளவில் செவிடதாகு, மாற்றமில்லாக்குருநாடி யஞ்சதாகும் வளர்ந்துநிற்கும் நேர்மைதன்னை மதித்துப்பாரே. ௩௭

பேர்பெரியகுருநாடி குணமேதென்னில் பிரண்டுவரும்வாதத்தி லட்டைபோலச், சீரறியவரயுமிகு மிருமல்தோன்றுந் திவைவுசொறிமி குறிவருந் திரேகம்வாடுஞ், சூரறியபித்தத்தி லாமைபோலத் தோன்றி டுகில்பித்தமது சுழற்றுவானீர், கார்பெருகிவருவதுபோல் வேவுதோ ன்றி கதித்திடுகில்நீர்கடுக்குங் கைகாலோயும். ௩௮

சேற்பனத்தின்குருநாடி சிங்கம்போலாய்ச் சீறிநிற்குமாமாகில்ச ன்னிதோன்றும், ஆற்பனத்தைப்பூடுருவித் தமருமாகில் அசாத்திய மாமரணகுறிதப்பா, காற்பனனேகுருநாடி பின்னல்போலக் கழியும்வ யிர்க்கடுப்பெடுக்குங் கைகால்வீங்கும், ஏற்பனவுமில்லையில்லை இட்டஞ் சொன்னேன் இசைந்தகுருநாடிநிலை இறக்கிப்போமே. ௩௯

பாற்பளவில்குருநாடி பக்கம்பாயில் பாரித்துசிலேற்பனந்தா னெ திரேமோதுங், கூற்பறவேகுருநாடிநேரேநிற்கில் குற்றமில்லைவாதபித் த மிரண்டுஞ்சேருந், தாற்புறவேகுருநாடி பின்னேவாங்கில் தப்பாது வசாத்தியங்கள் தனைச்சாருங், காற்பளவேகுருநாடி சமனாய்நின்றா ல் கல்லுடலில்வல்லுயிராய்க் கருதலாமே. ௪௰

ஏற்றகுருநாடிதன்னை யிசைந்துபார்க்கி லிடையும்பிங்கலையுமே யி சைந்துமாறி, மாற்றமில்லாச்சுழிமுனையைத் தானேபற்றி மாறிநிற்கு ங்கத்தரிக்கை மாறல்போலச், சீற்றமுடன்வாதபித்தஞ் சிலேற்பன மொன்றே திசைநாடிதானாய்நின்று, கோற்றசிறுகுருநாடிநிலையைப்பா ர்க்கில் கோமான்றன்திருக்கூற்றைக் கூறலாமே. ௪௧

அகாரமுதல்பத்தோ ரெழுத்துந்தானும் அஞ்செழுத்துமெட்டெழுத்தும் அதுவேயாகும், விகாரமுடன்நின்விலொளி யதுவேயாகும் விதர்ப்பமுடனுதாரமாறுமாகும், ஒகாரமுடன்தத்துவங்கள் தொண்ணூற்ருறும ஒத்துநிற்குங்குருநாடி யொன்றுபோல, சிகாரமெனுமஞ்சவத்தேமூலநாடி சிவசிவாவென்றநிலை தெளிந்துகொள்ளே. சஉ

ஒன்றுக்குமெட்டாத நாடிநேர்மை ஊடுருவித்தமர்நிற்கும் உண்மைகேளீர், வன்றுதான் மதுவருந்தும் நேர்மைபோல வாதபித்தசிலேத்துமத்தில் மதுவுண்டாப்போல், என்றைக்குமவாதபித்தம் நடுவேநிற்கும் மேறுவதுகுறைவதுவு மில்லைசொன்ஞேங், கனறுக்குப்பாலிறங்கும் பசுவைப்போலக் காத்துநிற்குங்குருநாடி காளேபாரே. சங

குருநாடிநிலையறியார் குருடரெல்லாங் கூட்டமிட்டுச்சாத்திரப் பேய்க் குரல்கள்சொல்வார்; மருள்நாடிவாதபித்தஞ் சிலேற்பனமூனறு மற்றிசமேயென்றறியார்வார்த்தைசொல்வார்,கருநாடிகுருநாடியாகக்காணுங் கைமுறையாய்க்குருக்காட்டக்காணும், பெருநாடிசாத்திரத்தில் மயங்கிப்போவார் பித்தரேகுருநாடி பின்னல்பாரே. சச

வாதபித்தம்ரெண்டிற்கு நடுவேபார்க்கில் மதுவுண்ணும்வண்டது போல்மத்திசத்தில், போதமொருமூவிரலும் முருவித்தாண்டிப் பூரணமாயமூலமுக உருவிப்பாய்ந்து, சாதமுற்றவிசைநரம்பின் ஊடுசார்ந்துசஞ்சரமண்டலமேவிச்சாய்ந்துபின்னும், நாதமுற்றகுருநாடியெங்குஞ்சுத்தி நடுவிலவரும்நேர்மைதனை நாடிப்பாரே. சரு

நூலொன்றுந்தப்பாது தொகையைக்கண்டால் நூதனமாய்ப்படித்தவர்கள் வளேயமாட்டார், வாலென்றுந்தலையென்று மறியார்மூடர் வார்த்தையினுல்மருட்டிவிப்பார் மற்றப்பேரை, சேலொன்றுமறியாதபொஸ்தகப்பேய் சிங்கத்தைநரியெதிர்த்த செய்கைபோல, யால்கொண்டகுருநாடி யாசாஞ்சொல்வில் மற்றொருவரெதிரில்லை வழுத்துங்காலே. சசு

குருமுறையாய்குருநாடி தொட்டுக்காட்டி கூறுசக்குருநாடிக்குசலுஞ்சொல்லி, திருமுறையாய்மூவிரலில் செய்கைசெப்பி சித்தாந்தம் வேதாந்தம்சிடத்திற்காட்டி, மருள்நாடிவிரல்நாடிபிரண்டுந்தாண்டி மாற்றமில்லாக்குருநாடி மதியுங்காட்டி, உருநாடிமூவிர லுமுருவிநின்றஉண்மையறிந்தவர்க்குநிக ருரைக்கொண்ணுதே. சஎ

பராபரமாய்க்குருநாடி பண்ணிப்பார்க்கில் பகருமிடைகீழ்மேலும் பஞ்சநேர்மை, தார்தரமாய்விரல்மூன்றுந் தன்னைப்பார்க்கில் சாதகமாய்ஒருவிரலுக் கஞ்சுகாணும், நீர்மயமாய்விரல்மூளையும்இட மும்வர்தம் நின்றநடுப்பித்தமென நிறைந்துகாணும், நீர்ப்பதமேசிலேற்பனமுமவலமும்பின்னுஞ் சீர்பார்க்கில்மூவிரலு முச்சீரைப்பாரே. சஅ

